# நம் நேரு

( வாழ்க்கை வரலாறு )

ஆசிரியர் :

" வல்லிக்கண்ணன் "

கலா மன்றம்

131, பிராட்வே :: சென்னை-1.

# முன்னுரை

இந்திய மக்களின் அன்பையும் நம்பிக்கையையும் பெற்றுள்ள ஒரு சில தலைவர்களுள் ஜவஹர்லால் நேருவும் ஒருவர். உலக நாடுகளின் போற்றுதலையும், எங்குமுள்ள அரசியல் வாதிகள், அறிஞர்கள் முதலானோரின் மதிப்பையும் பெற்று விளங்குபவர் அவர். இந்திய நாட்டின் சரித்திரத்தை மாற்றி அமைக்கப் போராடிய வீரத்தியாகிகளில் ஒருவர் அவர்.

ஜவஹரின் சரித்திரம் இந்திய விடுதலைப் போராட்டத்தின் வரலாறு என்றே சொல்லலாம். நேரு தனது வாழ்க்கையை சுதந்திரத்திற்கும், காங்கிரஸின் வளர்ச்சிக்கும் அர்ப்பணித்து, அவற்றிலேயே இன்பமும் சிறப்பும் கண்டார். ஆகவே, நேருவின் வரலாறு நீண்ட காவியமாகும், நேருவின் வாழ்க்கைச் சரித்திரத்தில் காணப்படும் மிக முக்கியமான நிகழ்ச்சிகளையும், அவரது சிறப்புகளைச் சுட்டிக் காட்டக் கூடிய சுவையான விஷயங்களையும் மட்டுமே இச் சிறு புத்தகத்தில் சேர்த்திருக்கிறேன். தொடர்பு குன்றாத வகையில் இந்திய விடுதலைப் போராட்ட வரலாறும் குறிப்பிடப்பட்டுள்ளது இதில்.

"எனது மன வளர்ச்சியை ஒருவாறு வரைந்து காட்டும் முயற்சி தான் இது. இன்றைய இந்தியாவின் சரித்திரத்தை எழுதும் நோக்கம் எனக்கு இல்லை. என்றாலும், இந்திய சரித்திரத்தை மேல் நோக்காக ஆராயும் ஒரு முயற்சி போல் இது தோன்றலாம்" என்று நேரு தனது

சுயசரிதையைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். அவ் வார்த்தைகள் இந்த வரலாற்றுக்கும் பொருந்தும். ஆனால், "நம் நேரு" ஜவஹரின் 'மன வளர்ச்சி'யை மட்டுமே குறிக்கும் புத்தகம் அல்ல. சம்பவங்களை மாத்திரம் எடுத்துச் சொல்லும் வறண்ட பாடப் புத்தகமும் அல்ல. 'எல்லோரும் படித்து ரசிக்கக் கூடிய வரலாற்று நூல். அனைவரும் அறிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் இதில் எவ்வளவோ உள்ளன' என்பதை ரசிகர்கள் உணர முடியும்.

சுதந்திர இந்தியாவின் நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும் உருவாக்கி வருகின்ற நம் நேருவின் சென்ற கால வாழ்க்கையை அறிந்து கொள்ள' இப் புத்தகம் மிகுதியும் துணை புரியும். இத்தகைய பயனுள்ள பணியை எனக்கு அளித்து, நம் தலைவர் நேருவின் வரலாற்றை எழுதுவதற்கு ஒரு வாய்ப்பு அமைத்துக் கொடுத்த கலா மன்றத்தாருக்கு எனது இதயபூர்வமான நன்றி உரியது.

சென்னை
8, பிப்ரவரி 1954

**வல்லிக்கண்ணன்.**

# நம் நேரு

## அத்தியாயம் 1.

மண்ணோடு மண்ணாகக் கிடந்து, தன் மதிப்பை உணராது அடிமையாக உழன்ற இந்திய மக்களை விழித்தெழச் செய்து, உரிமை உணர்வு புகுத்தி, சுதந்திரம் பெற்ற மக்களாக வாழும்படி மாற்றிய மாபெரும் தலைவர் மகாத்மா காந்திஜீ ஆவர்.

அண்ணல் காந்திஜீ காட்டிய வழியில் அடி எடுத்து வைத்து, அவருக்குத் துணையாய், தோழனாய், தொண்டராய் பணியாற்றி, மக்களின் உள்ளத்திலே தனி இடம் பெற்று விட்ட தலைவர் நம் நேரு. காந்தி அடிகளின் திட்டங்களைச் செயலாற்றிய காங்கிரஸ் மகாசபையின் காரியதரிசியாய் தொடர்ந்து பல ஆண்டுகள் பணி புரிந்து, பல தலைவர்களின் அன்பையும் மதிப்பையும் பெற்று, கட்சியை வெற்றிப் பாதையில் நடத்தும் தலைவராகி, நாட்டுக்கு நல்வழிகாட்டும் பிரதமரும் ஆகித் திகழ்கிறவர் பண்டித நேரு.

ஜவஹர்லால் நேரு இன்றைய இந்தியாவின் இணையிலாத் தலைவர். ஆசியாவின் மதிப்பை அதிகப் படுத்திய அரசியல் அறிஞர். உலக அரசியலில் நியாயமான யோசனைகளைக் கூறி, அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய திட்டங்களை வகுத்துக் காட்டும் திறமை பெற்ற

மேதை அவர், உலகத்தில் நிலையான சமாதானத்தை நிறுவ அரும்பெரும்பாடுகள் பட்டு வரும் சிந்தனையாளர். உலகத் தலைவர்களுள் முக்கியமானவர்களில் முக்கிய மானவர் அவர். ஓயாத உழைப்பின் உருவம். உயரிய பண்புகளின் உறைவிடம். 'மனித குல மாணிக்கம்' நேரு.

காலகாலமாகத் தனிப் பெரும் புகழ்பெற்று வந்துள் ளது இந்தியா. அதன் மாண்பை மேலும் அதிகமாக உயர்த்திய பெருமை மகாத்மா காந்திஜீக்கு உண்டு. கிடைத்த மாண்பைக் குறையாமல் காத்ததோடு, இன் னும் அதிகமாக வளர்த்து, உலக நாடுகளின் கவனத்தை இந்தியாவின் பக்கம் இழுத்து நிறுத்தி, சரித்திரத்தை உருவாக்கி வருகின்ற சிறப்பு பண்டித நேருவுக்குக் கிடைத்திருக்கிறது.

சரித்திரத்தையே மாற்றி அமைக்கும் ஆற்றல் ஒரு சில தலைவர்களுக்கே உண்டு. இந்திய மக்களை மனிதர் களாக்கியதுடன் புதுயுக உதயத்தை வரவேற்கக் கூடிய ஆர்வமுள்ளவர்களாக மாற்றிய பெருமை காந்திஜீக்கு உண்டு என்றால், விழித்தெழுந்த நாட்டினரின் உணர்வு வெள்ளத்துக்கு ஓர் போக்குக் காட்டி, அழிவுச் சக்தியை மட்டுப்படுத்தி, ஆக்க வேலைகளுக்கு அடிகோலி, சமு தாயத்தின் வளர்ச்சிக்காக ஆவன செய்து இந்தியாவின் சரித்திரத்தைச் செம்மைப்படுத்தும் பெருமை நேரு வையே சாரும். அதற்கேற்ற தகுதியும் திறமையும் பெற்ற தலைவர் அவர் தான். அதனால் தான், சுதந்திர இந்தியாவின் முதல் பிரதம மந்திரியாக வந்த நேரு மறு படியும் அதே பதவிக்கு மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டார். நாட்டு மக்களின் நம்பிக்கையையும் நன்மதிப்

யையும் பெற்றுள்ள நேரு தான் காங்கிரஸின் ஒற்றுமையையும் மானத்தையும் காப்பாற்ற முடியும் என்ற எண்ணம் நிலைத்துவிட்டது. அதனாலேயே அவர் மீண்டும் மீண்டும் காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்.

காற்றடிக்கும் வேளையிலே கனி பறித்து அனுபவிக்கத் தோன்றிய சந்தர்ப்பத் தலைவர் அல்ல நேரு. தேர்தல் காலங்களில் சட்டை மாற்றிக் கொண்டு பட்டம் காட்டிப் பதவி பிடிக்க வரும் பண்பினர் பரம்பரையில் வந்தவர் அல்லர் அவர். களத்திலே குதிக்காமல் முற்றத்தில் அமர்ந்து போதனைகள் புரிந்துவிட்டு, உரிமை கைக்கு வந்ததும் பொறுப்பான ஸ்தானங்களில் ஒட்டிக் கொள்ள ஓடிவரும் வழி காட்டிகளின் வகையைச் சேர்ந்தவர் அல்லர் அவர். மக்களைத் தூண்டிவிட்டுத் திடீர் திடீரென்று மாயமாக மறைந்து பதுங்கிப் பின் தலைகாட்டிப் பெரும் பேச்சுப் பேசுகின்ற வீரர்களின் வழிவந்தவர் அல்லர் அவர்.

வீரம் அவரது உடன்பிறப்பு. தியாகமும் திறமைகளும் அவர் குலத்தின் சிறப்புகள். ஆளும் ஆற்றல் பெற்ற தலைவரின் மகனாய் நாடாளப் பிறந்தவர் பண்டித நேரு. மன்னர்கள் போல் வாழ வேண்டிய தந்தையும் மகனும், மக்களின் நலனுக்காக, நாட்டின் உயர்வுக்காக, கொடிய இன்னல்கள் அனைத்தையும் தாங்கிச் சகித்து வந்தது அவர்களது உயர்வை மட்டும் காட்டவில்லை, நாடு செய்த பாக்கியம் என்றும் உணர்த்துகின்றது.

பண்டித நேருவின் குடும்ப சரித்திரம் தன்னேரில்லாக் காவியம். ஜவஹரின் வரலாறு ஈடு இணையற்ற

வீரசரிதை ஆகும். மக்கள் மதிக்கும் மாண்புறு தலைவராய், நாட்டின் வீரநாயகனாய், நேரு வளர்ந்துள்ளது மாயவித்தைகளினால் அல்ல; வாசாமகோசரமான பேச்சுக்களினால் அல்ல; ஆடம்பர விளம்பரங்களினால் அல்ல—குன்றாத நாட்டுப் பற்றினால், தளராத போராட்டத்தினால், ஓயாத சிந்தனையினால், உணர்வு கொளுத்தும் ஊக்கத்தினால், அற்புதமான ஆற்றலினால், போற்றத்தக்க திறமைகளினால் தான் என்பதை நேருவின் வரலாறு எடுத்துச் சொல்லும்.

## *அத்தியாயம் 2.*

காஷ்மீர் — இந்தியாவின் நந்தவனம், எழில்அரசி கொலுவிருக்கும் இன்பப்பூங்கா. இயற்கை அற்புத வர்ணங்களால் தன்னையே அலங்கரித்துக்கொண்டு மகிழும் அழகுநிலம். அதுதான் நேரு குடும்பத்தினரின் தாயகம்.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு, பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், காஷ்மீர பிராமணர்கள் சிலர் அழகு தவழும் மலைநகரிலிருந்து இறங்கி வந்தார்கள். பசுமையும் வளமும் பரந்து கிடந்த சமநிலங்களிலே செல்வமும் புகழும் சேகரிக்கும் நோக்குடன் முன்னேறினார்கள். மொகலாய சாம்ராஜ்யம் அஸ்தமித்துக் கொண்டிருந்த காலம் அது. மன்னர் மன்னன் அவுரங்கசீபுக்குப் பிறகு பருக்ஸியார் என்பவன் ஆட்சிபீடத்தில் அமர்ந்திருந்தான். அப்போது தான் காஷ்மீரிகள் டில்லி நோக்கி வந்தார்கள்.

சமஸ்கிருதத்திலும் பெர்ஸிய மொழியிலும் சிறந்த கல்விமானாக விளங்கிய ராஜ்கால் எனும் காஷ்மீரி முன்னரே பருக்ஸியாரின் கவனத்தைக் கவர்ந்திருந்தார்.

அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் தான் மன்னனின் அழைப்புக்கு இணங்கி, டில்லி வந்து சேர்ந்தார்கள். ராஜ்கால் என்பார் மன்னனிடமிருந்து ஜாஹீரும் வீடும் இனுமாகப் பெற்ருர். கால்வாய் ஒன்றின் கரையிலே அமைந்திருந்தது அந்த இடம். 'நேஹர்' என்ருல் கால்வாய் எனப் பொருள்படுமாம். கால்வாய்க் கரை ஓரமாக வசித்த வீட்டார் என்பதைக் குறிப்பிட ராஜ்கால் பெயருடன் 'நேஹரு' என்பதும் கூடியதாம். 'கால்' என்கிற குடும்பப்பெயர் 'கால்—நேரு' என மாறியது. காலப்போக்கில் 'நேரு' என்பதே குடும்பப் பெயராக நிலைத்துவிட்டது.

ஜவஹரின் முப்பாட்டனர் லக்ஷ்மிநாராயண நேரு என்பவர் டில்லிச் சக்கரவர்த்தியின் அரசவையில் 'சர்க்கார் கம்பெனி' வக்கீலாகப் பதவி வகித்து வந்தாராம். 1857-ல் முதல் இந்தியப் புரட்சி நிகழ்வதற்குச் சிறிது காலம் முன்பு வரை, 'டில்லிக் கொத்தவால்' ஆகப் பணியாற்றிய கங்காதரநேரு என்பார் நம் நேருவின் பாட்டனர் ஆவர்.

இந்தியப் புரட்சி, நேரு குடும்பத்தினருக்கு டில்லி ராஜ்யத்துடன் இருந்த தொடர்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. அந்தச் சந்தர்ப்பத்தில், நேரு குடும்பத்தினரின் பத்திரங்களும் மதிப்பு மிக்க பொருள்களும் அழிந்துபோயின. நேரு குடும்பத்தார் டில்லியிலிருந்து ஆக்ரா நகருக்குக் குடியேற நேர்ந்தது.

ஆக்ரா நகரில்தான் ஜவஹர்லால் நேருவின் தந்தையார் பண்டித மோதிலால்நேரு 1861-ம் ஆண்டு மே மாதம் ஆரும் நாளில் பிறந்தார். அதே நாளில்தான் இந்தி

யாவின் அரும்பெரும் கவிஞராகிய ரவீந்திரநாத் தாகூரும் அவதரித்தார் என்பது குறிப்பிடத் தகுந்த விஷயம்தான்.

மோதிலால் நேரு பிறப்பதற்குச் சில மாதங்களுக்கு முன்பாகவே அவரது தந்தையார் காலமாகிவிட்டாராம். அதனால் குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்பு மோதிலாலின் பெரிய சகோதரர்கள் மீது படிந்தது. ஜவஹர்லாலின் 'பெரிய பெரியப்பா' வனஸீதர நேரு பிரிட்டிஷ் சர்க்காரின் நீதி இலாக்காவில் உத்தியோகம் ஏற்று, அடிக்கடி இடமாற்றங்கள் பெற்று வாழ்ந்து விட்டார். ஆகவே மோதிலால் தனது இரண்டாவது அண்ணா ஆகிய நந்தலால் நேருவின் கண்காணிப்பிலேயே வளர நேர்ந்தது.

நந்தலால் நேரு இந்திய சமஸ்தான நிர்வாகப் பொறுப்பில் நல்ல பங்கு பெற்றுத் திகழ்ந்தவர். ராஜபுதனத்தில் உள்ள கேத்ரி சமஸ்தானத்தின் திவானாக அவர் பத்து வருடங்கள் பணியாற்றியிருக்கிறார். அதன் பிறகு அவர் சட்டக்கல்வி பயின்று ஆக்ராவிலேயே வசித்து வக்கீல் தொழில் பார்த்து வந்தார். அவரே மோதிலாலுக்கு அண்ணனாய், தந்தையாய், வாழ்வின் வழிகாட்டியாய் விளங்கினார்.

புதிதாக நிறுவப்பெற்ற ஹைக்கோர்ட்டுடன் நல்ல தொடர்பு கொண்டிருந்தார் நந்தலால். ஆக்ராவிலிருந்த ஹைக்கோர்ட் அலகாபாத்துக்கு மாற்றப்படவும், நேருவின் குடும்பத்தினரும் ஊர் மாற்றம் பெற்றனர். 'அலகாபாத்தையே 'எங்கள் ஊர்' என்று சொல்லும் வண்ணம் அங்கேயே நிலைத்துவிட்டனர்.

நந்தலால்நேரு உயர்தர நீதிமன்றத்தின் 'பெரிய வக்கீல்' ஆகப் புகழ்பெற்று விட்டார். தாயாரின் செல்

வப்பிள்ளையாக வளர்ந்த மோதிலால் இளம் பருவத்தில் பெர்ஸிய, அராபியமொழிகளை மாத்திரமே கற்றுத் தேர்ந் தார், அம்மொழிகளில் அவர் பெற்றிருந்த புலமை வயோதிகர்களையும் பிரமிக்க வைத்ததாம். பிறகு அவர் கான்பூரிலும், அலகாபாத்திலும் ஆங்கிலக்கல்வி பயின்று தேர்ந்தார். சிறுவயதில் படிப்பில் சிறப்புற்று விளங்கியது போலவே, கல்லூரி நாட்களில் குறும்புத்தனத்தில் பெரிய வராக விளங்கினராம் அவர். படிப்பில் காட்டிய ஆர்வத்தை விட அதிகமான உற்சாகத்தை மோதிலால் ஆடம்பர விளையாட்டுகளில் செலுத்தி வந்தாராம். மேல் நாட்டு நடை உடை பாவனைகள், மேல் நாட்டி னரின் வாழ்க்கைமுறை இவைகளின் மீது அவருக்கு மோகம் ஏற்பட்டது. கல்கத்தா, பம்பாய் போன்ற பெரிய நகரங்களில்கூட அந்த நாகரிகம் சர்வசாதாரண மாகப் பரவி இருந்ததில்லை. அந்நாட்களிலேயே மோதி லால் மேலை நாகரிகத்தின் ரசிகராக மாறிவிட்டார். அவருடைய முரட்டு சுபாவமும், குறும்புத்தனமும் தலை தூக்கி நின்றாலும், அவரது அறிவின் திறனையும் உணர் வின் கூர்மையையும் கண்டு கல்லூரியின் ஆங்கிலேயப் பேராசிரியர்கள் அவர்பால் அதிக அன்பு காட்டி வந்தனர்.

கல்லூரிப் பரீட்சைகளில் மோதிலால் விசேஷமான கௌரவங்கள் எதுவும் பெறாமலே தேர்ந்தார். ஆனால் பி. ஏ, இறுதிப் பரீட்சை எழுத வேண்டிய அவசியம் ஏற்பட்ட போது, மோதிலால் நன்றாகப் படிக்கவில்லை. முதலாவது நாள் தாம் எழுதிக் கொடுத்த விடைகளை எண்ணி அதிருப்தி கொண்ட மோதிலால் இதர தினங்க ளில் பரீட்சை எழுதப் போகாமல் தாஜ்மகாலில் காலக் கொலை செய்து விட்டு உரிய நேரத்தில் வீடு திரும்பு

வதை வழக்கமாகக் கொண்டாராம். இதனால் அவர் கல் லூரிப் பட்டம் பெற முடியாமல் போயிற்று.

மோதிலால் நேரு சமூகத்தில் காலூன்றி வாழ்க்கை யில் சிறப்பாக முன்னேற ஆசைப்பட்டார். ஆகவே அவ ருடைய நோக்கு இயல்பாகவே வக்கீல் தொழில்மீது திரும்பியது. அன்றைய இந்தியாவில் இந்தியரின் முழுத் திறமைக்கும் இடமளிக்கக் கூடிய ஒரே தொழில் அது வாகத் தானிருந்தது. வெற்றி காணும் ஆற்றல் பெற்ற வர்களுக்கு அளவுக்கு அதிகமான பலன்களையும், தகுந்த கௌரவங்களையும் சம்பாதித்துக் கொடுக்கக்கூடிய சக்தி வக்கீல் தொழிலுக்குத் தான் இருந்தது. மேலும், வாழ் வில் வெற்றியோடு விளங்கிய அண்ணா பின்பற்றத் தக்க உதாரணமாக அவர் கண் முன் நின்றார்.

எனவே, மோதிலால் நேரு ஹைக்கோர்ட் வக்கீல் பரீட்சையில் கலந்து கொண்டார். அதில் முதலாவதாகத் தேர்ந்து, தங்கப் பதக்கமும் பெற்றார். தான் எண்ணித் துணிந்து திட்டமிட்டுத் தேர்ந்தெடுக்கும் பாதையில் அற்புதமான சாதனைகள் கண்டு வெற்றி பெறும் சக்தி தனக்கு உண்டு என்பதை அவர் நன்கு நிரூபித்துவிட் டார்.

மோதிலால் கான்பூர் ஜில்லாக் கோர்ட்டில் மூன்று வருஷ காலம் வக்கீல் தொழில் நடத்திய பிறகு அலகா பாத் ஹைகோர்ட் வக்கீலானார். கடுமையாக உழைத்துத் தக்க கவனிப்பைப் பெற்றார். இச் சந்தர்ப்பத்தில் அவரது சகோதரர் மரணமடைந்தார். இத்துயரம் அவருக்குப் பேரிடியாகத் தோன்றியது. தன்னை முன்னுக்குக் கொண்டு வந்த மூத்த சகோதரர் இறந்த துக்கமும்

குடும்பப் பொறுப்புகளை ஏற்று நிர்வகித்து நல்ல பொரு ளாதார பலமாகத் திகழ்ந்த பெரியவர் போய்விட்ட நஷ்டம்—இரண்டும் ஒன்று கூடிக் கொண்டன. பெரிய குடும்பத்தைச் சுமக்க வேண்டிய பாரம் மோதிலாலுக்கு வந்து சேர்ந்தது.

ஆகையினால் மோதிலால் தீவிரமாகத் தொழிலில் முனைந்தார். ஆர்வத்தோடு உழைத்தார். நல்ல வெற்றி பெற்றார், அவர் ஆசைப்பட்ட தொழில் வெற்றி அவருக்குக் கிட்டியது. அது பொருளாதார வெற்றியைக் கொண்டு சேர்த்தது.

1889-ம் வருஷம் நவம்பர் மாதம் 14-ம் தேதி அன்று அலகாபாத்தில் பண்டித ஜவஹர்லால் நேரு பிறந்தார்.

வக்கீல் தொழிலில் சீறும் சிறப்பும் பெற்றுச் செல்வம் திரட்டுவதிலேயே கண்ணுகையிருந்தார் மோதிலால். அப்போதெல்லாம் அவர் பொதுப் பணி எதிலும் ஈடுபடத் துணியவில்லை. அந்த நாட்களில் தேசீய காங்கிரஸ் சபை என்பது ஆங்கிலேயருக்கு இசைந்த ஒரு ஸ்தாபனமாக உருவாகி வந்தது. அதன் ஒன்றிரு நிகழ்ச்சிகளுக்கு அவர் சென்றாராயினும், அச் சபையில் சேர்ந்து தொண்டாற்றும் எண்ணம் அவருக்கு எழவில்லை. மற்றவர்களுக்குப் பின்பாட்டுப்பாடும் மனோபாவம் அவருக்கு என்றுமே எழுந்ததில்லை. ஆளும் ஆசையும் அதிகாரப் பண்பும் அவரோடு உடன்பிறந்த இயல்புகள். சட்டப் பயிற்சியே அவரது கவனத்தையும் காலத்தையும் ஈர்த்துக் கொண்ட ஆசை நாயகியாக விளங்கிய காரணத்தினால் அவருக்கு வேறு எத்துறையிலும் நாட்டம் சென்ற

தில்லை என்றே கூற வேண்டும். அவருடைய தொழில் மூலம் கிட்டிய வெற்றியும் மதிப்பும் அவருக்குத் தனியாலதொரு கௌரவமும் தன்னம்பிக்கையும் கொடுத்தன.

இயல்பாகவே போர்த்தினவு பெற்ற அவர் எதையும் எதிர்த்துப் போராடி முன்னேறவே விரும்புவார், எனினும் ஆதி நாட்களில் அவர் அரசியல் களத்திலிருந்து விலகி நின்றது அதிசயமாகத்தான் தோன்றுகிறது. அக்காலத்திய காங்கிரஸ் நடவடிக்கைகளிலோ அரசியலிலோ போராடுவதற்குரிய சந்தர்ப்பங்கள் ஏற்பட்டதில்லை என்பதும் உண்மைதான். எனினும் தமக்குப் பிடித்த தொழிலில் ஈடுபட்டு வெற்றி ஏணியில் படிப்படியாக, உறுதியாக காலூன்றி உயர்ந்து கொண்டிருந்தவர் முற்றிலும் புதிய துறை ஒன்றில் குதிக்கத் தயாராக இல்லை. பிறரது தயவினலோ பிறருக்குத் தொண்டு புரிந்தோ தாம் உயரவில்லை : தமது மன உறுதியும் அறிவின் பலமுமே தமக்குத் துணை என்ற உணர்வு அவரது செயல்களில் பிரதிபலித்தது.—இவ்விதம் தமது தந்தையின் பண்பு பற்றிக் குறித்திருக்கிருர் ஜவஹர்லால்.

மோதிலால் நேருவுக்கு ஆங்கிலேயரின் வாழ்க்கை முறைகளில் ஏற்பட்டிருந்த மோகம் மாருமல் இருந்தது. செல்வம் பெருகப் பெருக அது வளர்ந்து வந்தது. தனது நாட்டினர் தாழ்ந்து, தாழ்ந்து தாழ்ந்தே போயினர் ; அவர்களின் இழிநிலை அவர்களது தகுதி பெற்றெடுத்த பரிசே ஆகும் ; நாட்டுப்பணியின் பெயரால் அரசியலில் புகுந்தவர்கள் பலரும் வேறு துறைகளில் முயன்று வெற்றி காண முடியாது தோல்வியுற்றவர்களே ஆவர் ; செயல் புரியும் ஆற்றல் பெற்றிராத அவர்கள் அனைவரும்

பெரும் பேச்சுக்கள் பேசுவது தவிர வேறெதுவும் செய்வதில்லை என்றெல்லாம் நம்பி வாழ்ந்தார் அவர்.

செல்வத்தைச் சேர்த்து வைப்பது என்பது தன்னுடைய சம்பாதிக்கும் திறமையையே அவமரியாதைப் படுத்துகிற காரியம் ஆகும்; எக்காலத்திலும் தனது தேவைக்கு ஏற்பச் சம்பாதிக்கும் சக்தி தன்னிடம் இருக்கிற போது எதற்காகப் பணத்தை மிச்சப்படுத்தி வைக்க வேண்டும் என்பது மோதிலாலின் கொள்கைகளில் ஒன்று. ஆகவே அவரும் அவர் குடும்பத்தினரும் ராஜரீகமான வாழ்க்கை நடத்திவந்தனர். இவ்விதச் சூழ்நிலையில் தான் ஜவஹர்லால் நேருவின் குழந்தைப்பருவம் கழிந்தது.

''பாதுகாப்பு நிறைந்தது; விசேஷ நிகழ்ச்சிகளுக்கு இடமற்றது'' என்று தன் குழந்தைப் பிராயம்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார் நேரு.

''செல்வம் மிகுந்த பெற்றோர்களால் வளர்க்கப் படுகிற 'ஒற்றைக்கு ஒரு மகன்'' கெட்டுக் குட்டிச்சுவராவதற்கு எவ்வளவோ வாய்ப்புகள் உண்டு. இந்தியாவில் இது சகஜம். அதிலும் பதினேரு வயது வரை குடும்பத்தின் தனி மகனாக வாழ நேர்ந்து விடுகிற சிறுவன் இந்த விபத்திலிருந்து தப்பி வளர்வது என்பது அரிய விஷயம் தான், எனது சகோதரிகள் இருவரும் என்னை விட எவ்வளவோ இளையவர்கள், எங்களுக்கிடையே உள்ள வயது வித்தியாசம் மிக அதிகமானதே. ஆகையினால் என் சிறு பிராயத்தில் என்னோடு ஒத்த தோழர்கள் எவருமின்றித் தன்னந் தனியனாகவே நான் வளர நேர்ந்தது. ஆரம்பப் பள்ளிக்கூடம் எதற்கும் என்னை எம் பெற்றோர்கள்

அனுப்ப வில்லை. வீட்டில் வைத்துக் கல்வி கற்கச் சிலர் நியமிக்கப்பட்டிருந்தனர். அதனால் சிறு வயதில் பள்ளித் தோழர்கள் சேரவும் எனக்கு வாய்ப்புக் கிட்டியதில்லை" என்று நேரு எழுதியிருக்கிறார்.

வயதுக்கு ஏற்ற தோழர்கள் இல்லையெனினும் அக் குடும்பத்தில் பையன்களுக்கும் உறவினர்களுக்கும் குறைவில்லை தான். சேர்த்து விளையாட வாய்ப்புகள் இல்லை எனினும் பெரியவர்கள் போல் வாய்வீச்சு வீசிக் களித்த இளைஞர்களின் பேச்சுக்களை எல்லாம் புரிந்தோ புரியாமலோ கேட்டுக் கொண்டிருக்க நேருவுக்கு வாய்ப்பு நிறைய இருந்தது.

ஆங்கிலேயரின் ஆணவம் பற்றியும், இந்தியரைப் பிறநாட்டார் இழிவாகக் கருதி வருவது குறித்தும் அவர்கள் காரசாரமாகப் பேசி விவாதிப்பார்களாம். அவமானம் எதிர்ப்படுகிற போது அதைச் சகித்துக் கொண்டிருப்பது தவறு; எதிர்த்துத் தாக்கிப் புத்தி கற்பிக்க வேண்டும் என்று கோஷிப்பார்கள். ஆளுவோருக்கும் அடிமைப் பட்டோருக்குமிடையே எழுகின்ற சமர்களைப் பற்றி ஆர்வமாக விவரித்து மகிழ்வார்கள் அவர்கள். 'நியாயம்' அன்று கூட ஆங்கிலேயர் பக்கமாகவே சதிராடி நின்றது என்பது சரித்திரப் பிரசித்தமான உண்மை. ஒரு இந்தியனை ஆங்கிலேயன் ஒருவன் கொன்றுவிட்டால் அந்த அந்நியன் தண்டனை எதுவும் பெறாமலே தப்பி விடுவது சாத்தியமாக இருந்தது அன்றைய இந்தியாவிலே. ஆனால், ஆங்கிலேயன் இருக்கின்ற ரயில் வண்டிப் பெட்டியினுள் இந்தியன் எட்டிப் பார்த்தால் கூட மூர்க்கத்தனமாகத்தாக்கப் பெறுவது சர்வசாதாரண நிகழ்ச்சியாக விளங்கியது. பொதுப்

பூங்காவிலும் பிற இடங்களிலும் கிடந்த நாற்காலி, பெஞ்சுகள் யாவும் வெள்ளேயருக்காக 'ரிசர்வ்' செய்யப்பட்டவை; அவற்றின் மீது இந்தியர் அமர்வது குற்றம் என்ற நீதி தான் குடியிருந்தது—இந்தியரின் சொந்த நாட்டிலே. இவற்றை உணர்ந்த எவரின் நெஞ்சு தான் கொதியாது இருக்கும் ?

நேரு குடும்பத்து இளேஞர்களின் உள்ளம் கொதித்தது. அவர்களது சூடான பேச்சுகளேக் கேட்டுக் கேட்டுச் சிறு வயது ஜவஹரின் பிஞ்சு நெஞ்சிலும் ஆளும் இனத்தோர் மீது கசப்பு பிறந்தது. ஆங்கிலேயன் ஒருவன் எதிர்த்துத் தாக்கப்பட்டான் என்ற செய்தி காதில் விழுந்தால் அவர் மனம் ஆனந்தக்களிப்பு பாடியது. அவருடைய உறவினர்களில் ஒருவரோ, அவர்களின் நண்பன் யாருமோ அடிக்கடி அந்நியரை வம்புச் சண்டைக்கு இழுத்துப் பாடம் புகட்டி வந்தது பெரிய தீரச் செயலாக மதிக்கப்படும்.

அடாது செய்த ஆளும் வர்க்கத்து மீதுதான் ஜவஹருக்குக் கசப்பு ஏற்பட்டதே தவிர, தனிப்பட்ட ஆங்கிலேயன் எவன் பேரிலும் அவருக்குக் கோபமோ வெறுப்போ எழுந்ததில்லே. ஆங்கிலேய உபாத்தியாயினிகளும் உபாத்தியாயர்களும் அவருக்குக் கல்வி கற்றுக் கொடுத்துக் கொண்டுதானிருந்தனர். ஆங்கிலேயர் பலர் அவர் தந்தையின் நண்பர்களாக விளங்கினர். அவர்கள் அடிக்கடி நேருவின் வீட்டுக்கு வந்து போகும் வழக்கமும் இருந்தது. "எனது இதய ஆழத்திலே இங்கிலீஷ்காரரை வியக்கும் பண்பு இருந்து வந்தது" என்று நேரு குறிப்பிட்டிருக்கிருர்.

ஜவஹர்லாலுக்குத் தந்தை பேரில் பாசமும் பயமும் இருந்தன. தந்தையின் பண்புகள் பலவற்றை எண்ணி எண்ணி வியக்கின்ற குணமும், தந்தையைப் போல் சிறப்புற்றுத் திகழ வேண்டும் என்ற ஆசையும் ஒன்றாக வளர்ந்தன அவர் உள்ளத்தில். அறிவு, ஆற்றல், வீரம் இவற்றுக்கெல்லாம் சரியான உருவகம் தனது தந்தைதான் என்ற நம்பிக்கை அவருக்குச் சிறு வயதிலேயே ஏற்பட்டுவிட்டது. மோதிலால் திடீரென்று பொறுமை இழந்து, ஆங்காரம் உற்று எரிந்து விழும் பண்பு பெற்றிருந்ததும், வேலைக்காரர்களைக் கோபித்துக் கண்டிக்கும் தன்மையும் ஜவஹருக்கு அச்சமும் நடுக்கமும் தந்தன.

தனது தந்தையின் கோபத்துக்குத் தான் இலக்கான சந்தர்ப்பம் ஒன்றைப்பற்றி ஜவஹர்லால் நேரு தன் சுய சரிதையில் எழுதியிருக்கிறார்... அவருக்கு ஐந்து அல்லது ஆறு வயது இருக்கும் போது நடந்த நிகழ்ச்சி அது.

தந்தையின் ஆபீஸ் மேஜை மேல் இரண்டு பவுண்டன் பேனாக்கள் இருந்ததை நேரு கண்டார். அவை ஆசையைக் கிளறின. ஒரே சமயத்தில் ஒருவருக்கு இரண்டு பேனாக்கள் தேவைப்படாது; அதனால் ஒரு பேனாவை எடுத்துக்கொண்டால் தந்தைக்குத் தெரியாது என்று ஜவஹர் எண்ணினார். எடுத்துக் கொண்டார். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு வீடே அமளிதுமளிப் பட்டதை அறிந்ததும் அவருக்கு நடுக்கம் ஏற்பட்டு விட்டது. காணாமல் போன பேனாவைத்தான் தேடுகிறார்கள் என்று புரிந்தும் கூட அவர் உண்மையை ஒப்புக் கொள்ளத் துணியவில்லை. ஆயினும் விஷயம் அம்பலமாகி விட்டது. மிகுதியும் கோபம் கொண்டிருந்த தந்தை

சிறுவன் ஜவஹரை 'வெளுவெளு வென்று' வெளுத்து வாங்கிவிட்டார்! உடலின் வேதனையாலும் உள்ளத்து வேதனையாலும் குறுகிப்போன ஜவஹர் தாயைச் சரணடைந்தார். உடல் நோவு தீருவதற்குப் பல நாட்கள் சிகிச்சை செய்ய வேண்டியது அவசியமாயிற்றும்.

இந்த நிகழ்ச்சியினால் ஜவஹருக்குத் தந்தை மீது ஆத்திரமோ வெறுப்போ ஏற்படவில்லை. தந்தை தனக்கு விதித்த தண்டனை சற்று அளவுக்கு அதிகமானது என்றாலும் நியாயமான தண்டனையே என்று தான் அவர் நம்பினார். தந்தையிடம் அவர் கொண்டிருந்த அன்பும் வியப்பும் அச்சமும் குறையவே இல்லை. தாய் சொருப ராணியிடம் அவருக்குப் பயம் ஒருநாள் கூட எழுந்ததே இல்லை. அவளுடைய பாசமும் அவள் காட்டிய பரிவும் செல்லமும் காரணமாக, ஜவஹர் அவளிடம் தன் இஷ்டம்போல் நடந்து தனது காரியங்களைப் பிடிவாத மாகச் சாதித்துக் கொள்வதிலேயே கருத்தாக இருந்தார். தந்தையிடம் சொல்லத் துணியாத எண்ணங்களையும் ஆசைகளையும் நேரு தாயிடம் கூறி ஆறுதல் பெறுவது வழக்கமாம்.

சிறு பிராயத்தில் நேருவின் நம்பிக்கைக்குப் பாத்திர மாகி அவருக்கு ஆறுதலும் உற்சாகமும் காட்டி வந்த மற்றொருவர் முன்ஷி முபாரக் அலி எனும் பெரியார் ஆவர். நல்ல நிலைமையில் வாழ்ந்த அவரது குடும்பம் 1857-ம் ஆண்டுப் புரட்சியால் வெகுவாக பாதிக்கப் பட்டிருந்ததாம். அவருக்கு எதிர்ப்பட்ட நஷ்டங்களும் அனுபவமும் முபாரக் அலியை இளகிய உள்ளத்தவராக வும், ஜனங்களின் அனுதாபியாகவும், குழந்தைகளிடம் பிரியம் காட்டுகிறவராகவும் மாற்றிவிட்டனவாம். சிறு

வன் ஜவஹர் துயரத்தில் சிக்கியபோதும், உற்சாகம் இழக்கும் வேளைகளிலும் அவருடைய துணையை நாடி ஓடுவது வழக்கமாம். நரை ஓடிய அழகிய தாடியும், வயது முதிர்ச்சியும் பெற்றிருந்த அவரது முகம் நேருவின் இளம் கண்களுக்கு அற்புதச் சித்திரமாக விளங்கியதாம். கணக்கற்ற கதைகளை உள்ளடக்கிய காலத் திருஉருவம் என்றே அப் பெரியாரை அவர் மதித்திருந்தார். அராபிய இரவுக் கதைகளையும், 1857—1858-ம் வருஷ அனுப வங்களையும், வேறு பல வகைக் கதைகளையும் முபாரக் அலி சுவையாகச் சொல்லுவது வழக்கமாம். நேரு வளர்ந்து பெரியவராகிப் பல வருஷங்கள் சென்ற பின்னர்தான் அந்தப் பெரியார் காலமானார் என்று தெரி கிறது. அவர் ஜவஹர்லால் நேருவின் நினைவிலே நிலை யான இடம் பெற்றுவிட்ட உத்தமர் ஆவர்.

சிறு வயதில் ராமாயண, மகாபாரதக் கதைகளைக் கேட்டு உற்சாகமும் உணர்வும் பெறும் பாக்கியமற்ற இந்தியக் குழந்தைகள் யாராவது இருக்க முடியுமா என்ன? ஜவஹருக்கு அவருடைய தாயும் உறவினரும் அக் கதைகளையும், மற்றும் பலவிதப் புராணக் கதைகளை யும், நாடோடிக் கதைகளையும் நிறைய நிறையச் சொல்லி மகிழ்வித்தனர். இந்த ரகமான கதைகளைக் கேட்டு ரசித்து மகிழ்ந்தார் நேரு. ஆயினும் சிறுவயது முதலே மதம், பக்தி, பூஜை எல்லாம் பெண்களுக்குத் தேவை யான காரியங்கள்' என்ற எண்ணம்தான் அவர் உள்ளத் தில் வளர்ந்து வந்தது.

மோதிலால் நேருவும், அவர் குடும்பத்தைச் சேர்ந்த ஆண்களும் 'மத அனுஷ்டானங்கள், பூஜை புனஸ்கா ரங்களை எல்லாம் வேடிக்கையாகவும் விளையாட்டாக

வுமே கருதினர், கர்ம சிரத்தையாக அவற்றை அவர்கள் போற்றியதில்லை. வீட்டில் உள்ள பெண்கள் எந்தப் பண்டிகை வந்தாலும் சரி, பூஜையாயினும் சரியே, சிறப்பாகக் கொண்டாடத் தவறியதே இல்லை. ஜவஹர்லால் தாயுடனும் பிறருடனும் சேர்ந்து போய் கங்கையாடுவதிலும், கோவில்களைச் சுற்றுவதிலும், காசியைக் காண்பதிலும், புகழ் பெற்ற சன்யாசிகளைத் தரிசிப்பதிலும் குதுகலம் அடைந்தார். எனினும் இந்த அனுபவங்கள் எல்லாம் அவருக்கு பக்தி புகட்டவுமில்லை; உள்ளத்தில் உயரிய தடங்கள் பதித்து விடவுமில்லை.

ஹோலி, தீபாவளி, ஜன்மாஷ்டமி, தசரா, ராம லீலா முதலிய பண்டிகைகளை அமர்க்களமாகக் கொண்டாடுவதில் ஜவஹரும் ஆனந்தம் கண்டார். ஆயினும் அவர் மிக அதிகமான உவகை கொண்டது அவரையே விழாநாயகனுகக் கொண்டு நிகழ்த்தப்படும் பிறந்த நாள் வைபங்களின் போதேயாம். பாராட்டும் சுதினும் அது. அன்று அதிகாலையிலேயே நேருவைப் பெரிய தராசு ஒன்றில் நிறுத்தி கோதுமை மூட்டைகள், இதர பொருள்கள் எல்லாம் கொண்டு எடைபோடுவார்களாம். பின்னர் அப்பொருள்களை ஏழை எளியவர்களுக்கு வழங்கி விடுவது வழக்கம். நேரு புத்தாடைகள் புனைந்து 'ஜம்' மென்றும் விளங்குவார். பலரும் அன்புப் பரிசுகள் கொண்டு தருவர். பிறகு பெரிய விருந்து நடைபெறும். சிறுவன் நேரு பெருமைப் பட்டுக் கொண்டதில் அதிசயம் ஒன்றும் இல்லை அல்லவா? ஆனால் அந்நாட்களில் அவருக்கு ஒரே ஒரு வருத்தம் இருந்ததாம். இந்தப் பிறந்த நாள் ஆண்டுக்கு ஒரு முறை தானே

வருகிறது. அது ஏன் அடிக்கடி வரக் கூடாது?' என்கிற வருத்தம் தான் அது. "அடிக்கடி பிறந்தநாள் கொண்டாட வேண்டும் என்று நான் புரட்சி கூடச் செய்தேன், முதிர்கின்ற வயதை நினைவுபடுத்தும் கசப்பான சின்னங்களே பிறந்த தினக் கொண்டாட்டங்கள் என்பதை அன்று நான் உணர்ந்தேனில்லை" என்று நேரு பின்னாட்களில் எழுதிவைத்திருக்கிறார்.

நேருவின் பத்தாவது வயதில் தான் அவர் குடும்பத்தினர் 'ஆனந்த பவனம்' எனும் பெரிய மாளிகையில் வாசம் செய்யத் தொடங்கினார்களாம். பவனத்தைச் சுற்றிப் பெரிய தோட்டமும், தோட்டத்தில் ஓர் குளமும் இருந்தன. அவற்றை ஆராய்வதிலும், அங்கு கட்டப் பெற்ற புதிய வீடுகளையும் வேலை செய்யும் தொழிலாளர்களையும் வேடிக்கை பார்ப்பதிலும் களிப்பெய்தினார் நேரு. நீச்சல் குளத்தில் நீராடுவதில் அவருக்கு அதிக ஆர்வம் இருந்ததாம். கோடை காலத்தில் ஒரே நாளில் பல தடவைகளில் குளித்து மகிழ்வதிலேயே பொழுதைப் போக்கி விடுவாராம் அவர். நீச்சல் குளம் ஒரு புதுமையாக விளங்கியது. அத்துடன் அலகாபாத்திலேயே முதன் முதலாக ஆனந்த பவனத்தில் தான் எலெக்ட்ரிக் விளக்குகள் மின்னத் தொடங்கின. ஆகவே அம்மாளிகையில் எப்பொழுதும் நண்பர்கள் கூடுவதும், குளத்தில் நீந்துவதும் பேசிப் பொழுது போக்குவதும் அதிகமாக இருந்தது. அனைத்தும் நேருவுக்கு உற்சாகம் அளிக்கும் சூழ்நிலையாகவே திகழ்ந்தது.

எனினும் நேருவின் இதய ஆழத்தில் ஓர் ஏக்கம் பதுங்கிக் கிடக்காமல் இல்லை. ஊரில் உள்ள சிறுவர்

களுக் கெல்லாம் அக்காளோ தம்பியோ, அண்ணனோ தங்கைகளோ இருக்கிறார்களே! தனக்குச் சகோதரர்களோ சகோதரிகளோ இல்லையே என்று வேதனைப் பட்டுக் கொண்டிருந்தார் அவர். எனவே, பல வருஷங்களுக்குப் பிறகு ஒரு தங்கை பிறந்த போது அவர் மிகுதியும் உள்ளக் கிளர்ச்சி உற்றார். குழந்தை பிறந்தபோது, மோதிலால் நேரு ஐரோப்பாவில் இருந்தாராம். தம்பி அல்லது தங்கையின் பிறப்பை எதிர்பார்த்து ஜவஹர்லால் வராந்தாவில் ஆவலோடு, பரபரப்போடு, காத்திருந்தார். டாக்டர் ஒருவர் வந்தார். பெண்குழந்தை தான்; நல்ல வேளையாகச் சொத்திலே பங்கு பெற ஒரு பையன் பிறந்து விடவில்லை என்று சொன்னாராம். "அவர் சும்மா விளையாட்டாகப் பேசியிருந்திருக்கலாம், என்றாலும், என் உள்ளத்திலே கசப்பும் கோபமுமே பொங்கின. இத்தகைய கேவலமான நினைப்பை நான் கொண்டு விட முடியும் என்று ஒருவர் எண்ணத் துணிந்தாரே என்ற உணர்வால் எழுந்த கொதிப்பு அது" என நேரு குறித்திருக்கிறார்.

நேருவின் பதினோராவது வயது முதல் அவருக்குக் கல்வி புகட்டும் பொறுப்பை ஏற்றவர் **பெர்டினண்ட் புரூக்ஸ்** என்பார். பலவகைகளில் நேருவின் மனப்பண்பை உருவாக்கியவர் புரூக்ஸ் தான். புத்தகங்களை நிறையநிறையப் படிக்க வேண்டும் எனும் ஆசையைத் தூண்டியவர் அவர் தானாம். விஞ்ஞான நுட்பங்களை அறிந்துகொள்ளும் ஆர்வத்தை அவரே வளர்த்து விட்டாராம். தியாஸபி, புத்தமதம், ஹிந்து வேதங்கள்,

மதசாஸ்திரங்கள், உபநிஷதங்கள், பகவத்கீதை. தத்துவ ஞானிகளின் சிந்தனைகள் பற்றி எல்லாம் கற்றுக் கொள்ள அவர்தான் உதவிபுரிந்தார். ஆகவே, நேருவின் உள்ளத்தைப் பண்படுத்திய பெருமையில் புருக்ஸுக்கு முக்கியமான பங்கு உண்டு. "எப். டி. புருக்ஸுக்குக் கடமைபட்டவன் நான்" என்று நேருஜீயே சுயசரிதையில் பொறித்திருக்கிறார்.

போயர் யுத்தம் நிகழ்ந்த காலத்திலும், ரஷ்ய, ஜப்பானிய யுத்தம் கிளர்ந்தெழுந்த போதும் அவற்றின் போக்கிலே நேரு அதிக கவனம் செலுத்தி வந்தாராம். எப்பொழுதுமே தினசரிப் பத்திரிகையை ஆவலுடன் எதிர் பார்த்து அயல் நாட்டுச் செய்திகளை ஆர்வமுடன் படித்து. உலக அறிவை அகண்டதாக்கி வந்தார் அவர். ஜப்பானியர்கள் பெற்ற வெற்றிகள் அவருக்கு உணர்வூட்டின. ஜப்பானைப் பற்றிய புத்தகங்களை ஏகமாக வாங்கிக் குவித்து விட்டாராம். அவற்றில் சிலவற்றைப் படித்து ஜப்பான் நாட்டின் சரிதை, அந்நாட்டின் வாழ்க்கை நிலை, ஜப்பானின் பழங்கதைகள் முதலியவற்றில் அவர் ஆழ்ந்து விட்டாராம்.

தேசீய உணர்வு முளைவிட்டு எழுந்து படர்ந்து வளர்ந்தது அவர் உள்ளத்திலே. இந்தியாவின் விடுதலையைப் பற்றிக் கனவு கண்டார். ஐரோப்பாவின் பிடியிலிருந்து விடுபட்ட ஆசியாவின் சுதந்திரம் பற்றி எண்ணினார். கையிலே வாளேந்திக் களத்திலே குதித்து, பாரதத்தின் தளைகளை அறுத்தெறியத் தாம் அருஞ்சமர் புரிவதாகவும், வீரதீர பராக்கிரமங்கள் செய்வதாகவும் கனவுகள் காண ஆரம்பித்தார் அவர்.

பொதுவாகவே அவர் வாழ்க்கையில் அடிக்கடி கண்ட கனவுகளில் ஒன்று ஆகாயத்தில் பறந்து பறந்து மேலெழும் செயலைக் காட்டுவதாம். எக் கருவிகளின் துணையுமின்றித் தானாகவே தான் மேலே கிளம்பி உயர உயரப் பறப்பதாகக் கனவுகள் தோன்றும். " அவை மிகத் தெளிவாகவும், நிஜமாகவே அனுபவிப்பது போலவும் தோன்றும். கனவின் பொருள் உரைக்கக் கற்ற ஆய் வாளர்கள் இவற்றைப் பற்றி எப்படி விரித்துரைப்பார் களோ நான் அறியேன் " என்று நேரு குறிப்பிட்டுள் ளார்.

வாழ்வில் மிக உயர்ந்து விளங்க வேண்டும் ; லட்சிய வெற்றி பெற வேண்டும் என்ற ஆசை வளர்த்த உள் மனத்தின் எண்ணப் பிரதிபலிப்புகளாக இருக்கலாம் அந் தக் கனவுகள். எதிர்காலத்தில் அவர் பெறவிருந்த வெற்றி களை, உலகமே வியந்து போற்றும் விதத்தில் அவர் உயர்ந்து விடுவார் என்பதை, முன்னதாகவே அதீத உணர்வு எடுத்துக்காட்டி வந்திருக்கிறது ; அதன் சூசகங் களே அக்கனவுகள் என்றும் கொள்ளலாம் அல்லவா ?

## அத்தியாயம் 3

1905-ம் வருஷம் மே மாதம்—ஜவஹர்லால்நேரு தனது தந்தை, தாய், சகோதரிகளுடன் இங்கிலாந்துக்குச் சென்றார். அப்பொழுது அவருக்குப் பதினைந்து வயது நிறைவுற்று விட்டது. அவரை ஹாரோ கலாசாலையில் மாணவராகச் சேர்த்துவிட்டு, நேருவின் பெற்றோர் ஐரோப்பிய யாத்திரை சென்று விட்டனர். பிறகு இந்தியா திரும்பினர்.

தாய் தந்தையரைப் பிரிந்து தனியாக வாழ நேர்ந்தது அது தான் முதல் தடவையாகையால் நேருவுக்குக் கொஞ்ச காலம் சிரமமாகத்தான் இருந்தது. எனினும் ஓயாத படிப்பும் விளையாட்டும் கொஞ்சம் கொஞ்சமாக வீட்டு நினைப்பை மறக்கடித்து விட்டன.

மாணவர்கள் மத்தியில் அவர் தனியன் போன்ற நிலைமையே ஏற்பட்டது. அவர்களில் ஒருவராகப்பழகி விளையாடித் திறமையோடு மிளிரும் சுபாவம் அவரிடம் இருந்ததில்லை. அவர் விளையாட்டுகளில் கலந்து கொண்டாலும் சோபிப்பதில்லை என்பதனுல் மற்றவர்கள் அவரை ஒதுங்கி வாழ விட்டுவிட்டார்கள். இதர மாணவர்கள் சதா விளையாட்டுகளைப் பற்றியே பேசிமகிழ்ந்தார்கள். விளையாட்டுகளை விட்டால் அவர்கள் பேச்சுக்கு வேறு பொருளே கிடையாது. ஆனுல் ஜவஹர் பள்ளிக்கூடப் பாடங்களில் மட்டுமின்றிப் பொது விஷயங்களிலும் நல்ல ஞானம் பெற்றிருந்தார். அவர் அதிகமான புத்தங்களும் பத்திரிகைகளும் வாசிப்பதில் அக்கறை காட்டி வந்தார். ஆகவே இதர மாணவர்கள் அவரது நோக்கிலே மந்த மதியினராகவே தோன்றினர், மேல்வகுப்புக்குச் செல்லச் செல்லத் தான் கூறிய அறிவுள்ளவர்கள் சிலரைக் காண முடிந்தது அவரால்.

அரசியல் விஷயங்களில் மாத்திரம் தான் நேருவின் கவனம் ஈடுபட்டிருந்தது என்றில்லை. ஆகாய யாத்திரை தொடங்க விமானங்கள் கட்டிப் பறக்க ஆரம்ப முயற்சிகள் நடந்து கொட்டிருந்தகாலம் அது. விமான வளர்ச்சியிலும், பறக்க முயன்ற தீரர்களின் பரிசோதனைகளைக் கவனிப்பதிலும் நேரு அதிக ஆர்வம் காட்டி வந்தார்.

நேரு ஹாரோவில் கல்வி கற்று வந்த காலத்தில் வேறு நாலைந்து இந்திய மாணவர்களும் அங்கு படித்து வந்தனர். அவர்களைச் சந்தித்து அவர்களுடன் அதிகமாகப் பழகியதில்லை நேரு. ஹாரோ தனக்கு உகந்த இடமில்லை என்ற உணர்வு அவர் உள்ளத்தில் வளர்ந்து வந்தது. 1906—1907-ம் வருஷங்களில் இந்திய அரசியல் உலகில் நிகழ்ந்த பெரிய விஷயங்களைப் பற்றி அவர் பத்திரிகைகள் மூலம் ஓர் சிறிதே உணர முடிந்தது. ஆயினும் இந்தியா விழித்தெழுந்து விட்டது என்பதை ஆங்கிலப் பத்திரிகை களில் வெளியான சிறுசிறு செய்திகள் கூட உலகுக்கு நாவலித்தன. வங்காளம், பஞ்சாப், மகாராஷ்டிரம் ஆகிய பிரதேசங்களில் குறிப்பிடத் தகுந்த உரிமைக் கிளர்ச்சிகள் நடைபெறுவதை நேரு ஊகிக்க முடிந்தது. லாலா லஜபதி ராய், அஜித் சிங் ஆகிய தலைவர்கள் நாடுகடத்தப்பட்டார் கள். திலகரின் பெயர் முழங்கத் தொடங்கியது. சுதேசி இயக்கமும், மறியல்களும் நிகழ்ந்தன. இவை பற்றிய சிறு செய்திகள் உள்ளத்தில் எழுப்பிய எதிரொலிகளை வாய் விட்டுப் பேசி மகிழ்வதற்குக் கூடச் சரியான தோழர்கள் ஹாரோவில் அவருக்குக் கிட்டவில்லை.

பள்ளிக்கூடத்தில் அவரது திறமைக்காக அளிக்கப் பட்ட பரிசுப் புத்தகங்களில் கெரிபால்டியின் வரலாற்று நூல் ஒன்று இருந்தது. இத்தாலிய வீரன் கெரிபால்டியின் கதை நேருவை வசீகரிக்கவே, கெரிபால்டிவரலாறுபற்றிய இதர புத்தகங்களையும் வாங்கிப் படித்தார் அவர். விடுதலை வேட்கையுடன் போராடிய இத்தாலியைப் போல் இந்தியா வும் சுதந்திரத்துக்காகப் போரிட வேண்டும் என்ற இதயத் துடிப்பு அவருக்கு ஏற்பட்டது. தனது எண்ணங்களும் லட்சிய ஆர்வமும் வளருவதற்கு ஏற்ற சூழ்நிலை

கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் தான் கிடைக்கும் என்று கருதினார் அவர். ஆகலால் தந்தைக்கு எழுதி அங்கீகாரம் பெற்று, நேரு கேம்பிரிட்ஜ் 'டிரினிட்டி காலேஜில்' சேர்ந்தார். ஹாரோவில் இரண்டு வருஷங்களும், கேம்பி ரிட்ஜில் மூன்று வருஷங்களும் பயிற்சி பெற்றார் அவர்.

வாழ்க்கையை மனோகரமானதாக அமைத்துக் கொள்ள வேண்டும்; வாழ்வின் சகல இன்பங்களையும் அனுபவித்து, வாழ்வதற்குக் கிட்டிய ஒவ்வொரு நாளையும் இனிய பொழுதாகப் பயன்படுத்திக் கலைமய வாழ்வு வாழ வேண்டும் என்ற நினைப்பு அவருக்குக் கல்லூரி நாட்க ளில் மேலோங்கி இருந்தது. இந்தியாவில் நடைபெற்றுக் கொண்டிருந்த சரித்திரப் பிரசித்தமான சம்பவங்களைப் பற்றிய செய்திகளோ அவரையும் ஆசை காட்டி அழைப் பதாக இருந்தன. இப்படி இருவேறு ரக எண்ணக் குழப் பம் அலைக்கழித்த போதிலும் நேருவின் கல்லூரி வாழ்க்கை இனிமை நிறைந்தே விளங்கியது.

கேம்பிரிட்ஜில் கல்வி கற்றுக் கொண்டிருந்த இந்தி யர் பலரும் கூடி 'மஜ்லீஸ்' என்றொரு சங்கம் அமைத் திருந்தனர். அங்கு அடிக்கடி இந்தியப் பிரச்னைகளைத் தீவிரமாக அலசி ஆராய்ந்தனர். காரமாகப் பேசிச் சூடாக விவாதித்தனர். ஆனால் எல்லாம் ஏதோ நடிப்பு போலவும், பிரிட்டிஷ் பார்லிமெண்ட் நிகழ்ச்சிகளைக் காப்பி அடித்துக்களிப்பது போலவுமே தோன்றும். அங்கு ஒரு விதி இருந்ததாம். பல மாத காலம் ஒரு தடவைகூட மேடை ஏறிப் பேசாமல் வாய்மூடி மௌனியாக வந்து வந்துபோகிற அங்கத்தினர் குறித்த ஓர் தொகையை அப ராதமாகச் செலுத்த வேண்டியது அவசியமாம். ஜவஹர்

லால் நேருவிடம் கூச்சமும் தயக்கமும் குடி கொண்டிருந்ததால், சபை முன் நின்று அவர் பேசத் துணிவதில்லை. அடிக்கடி அபராதம் செலுத்துவதில் அவர் தயக்கம் காட்டியதே இல்லையாம்! பிற்காலத்தில் எவ்வளவு பெரிய ஜன சமுத்திரத்தின் முன் நின்றும், மணிக் கணக்கிலே, சகலவிதமான பிரச்னைகளையும் தீர்த்துக் கட்டி விடும் சிந்தனைத் தீர்க்கமும் பேச்சு நயமும் கலந்த சொற்பொழிவுகளை ஆற்றும் வன்மை பெற்றுவிட்ட நேரு தனது வாலிபப் பருவத்திலே இப்படி இருந்தார் என்பது வியப்புக்குரிய விஷயம் தான்; இல்லையா?

இத்தகைய முரண்பாடு மற்றவர்கள் வாழ்க்கையில் வேறு விதமாகத் திகழ்ந்தது என்று தெரிகிறது. நேருவுடன் கல்வி கற்ற இந்திய மாணவர்கள்—'மஜ்லிஸ்'—கேம்பிரிட்ஜில் தீவிரமாகப் பேசினார்கள். வங்காளத்தில் தலைகாட்டி வளர்ந்த பலாத்கார இயக்கத்தை வியந்து போற்றினார்கள். அவர்களில் யாருமே பின்னர் இந்திய தேசீய விடுதலை இயக்கம் எதிலும் கலந்து கொள்ளவில்லை, பிரிட்டிஷ் ஆட்சியின் 'இந்தியன்ஸிவில் சர்வீஸில்' உத்தியோகம் பெற்றும், ஹைகோர்ட்டு நீதிபதிகளாக அமர்ந்தும், ஈவு இரக்கமற்ற வக்கீல்களாக மாறியும் தான் வாழ்க்கை நடத்தினார்கள் அந்த ஆரம்ப சூரப் புலிகள்.

இடைக் காலத்தில், ஜவஹரின் தந்தை இந்திய அரசியலில் கலந்து பணியாற்ற முன் வந்திருந்தார். இவ் விஷயம் நம் நேருவுக்கு மகிழ்வு அளித்தது. எனினும் மோதிலால் மிதவாதிகள் கோஷ்டியில் சேர்ந்திருந்தது அவருக்கு அதிருப்தியைக் கொடுத்தது. மோதிலாலும்

அவரது நண்பர்களும் மிதவாத மகாநாடுகள் கூட்டினார்கள். வங்கத்தின் தீவிரவாதிகள் செயலைக் கண்டித்து நடவடிக்கைகள் எடுத்தார்கள். 1907-ம் வருஷம் நடந்த சூரத் காங்கிரசுக்கு மோதிலால் தான் தலைவரர்கத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அப்பொழுது மகாநாடு குழப்பத்தில் முடிந்தது; ஆயினும் காங்கிரஸ் கட்சியே மித வாத இயக்கமாக மாறிவிட்டது.

மோதிலால் பண்பாட்டினுல் ஓர் மிதவாதி அல்லர். வலிய உணர்வுகளும் திடமான நம்பிக்கைகளும் அறிவும் ஆற்றலும் பெற்றிருந்த அவருக்கும் மிதவாதத்துக்கும் எவ்வளவோ தூரம் தான், என்றாலும் 1907 முதல் சில வருஷகாலம் அவர் மிதவாதியாக இருந்தது எதனுல்? அவர் எதையும் ஆழ்ந்து சிந்தித்து, நல்ல பலன் விளையும் எனக் கண்டால் தீர்க்கமான வகையில் செயல் புரியும் பண்பினர். ஆடம்பரமான கூச்சல்களும் படாடோப வார்த்தைகளும் அவருக்குப் பிடித்தமானவை அல்ல. பெரும் பேச்சுக்களின் பின்னே திடமான செயல் திட்டங்கள் மறைந்து கிடப்பதில்லை என்பது அவர் கருத்து. சுதேசி, பகிஷ்கார இயக்கங்களினுல் உருப்படியான பலன்கள் விளைந்து விடும் என்று அவர் எண்ணினாரில்லை. இவற்றுக்கு அடிப்படையாக அமைந்திருந்த பகைப் புலன்களும், மதரீதியான தேசியமும் அவருடைய இயல்புக்கே ஏற்காதவை, இந்தியாவின் முன்னேற்றத்துக்குப் புராதனப் பெருமைகளைத் திரும்பிப் பார்த்துக் கொண்டிருப்பது மாத்திரம் போதாது. பழமைக் கலாசாரம், ஜாதி ஆசாரங்கள், சமூகத்தின் பூர்வீகமான பழக்க வழக்கங்களை எல்லாம் புரிந்து கொள்ளும் ஆர்வமோ கௌரவிக்கும் ஆசையோ மோதிலால் நேருவுக்குக் கிடையாது.

மேல் நாட்டுப் புதிய கலாசாரமே இந்தியாவின் முற்போக்குக்கு வழிகாட்ட முடியும் என்ற நம்பிக்கை அவருக்கு உண்டு. ஆகவே, பிரிட்டிஷாரைப் பகைத்துக் கொள்வதும், அவர்களது தொடர்பை அறுத்துக் கொள்ள விரும்புவதும் சரியல்ல. ஆங்கிலேயருடன் ஒத்துழைத்து, ஆட்சியில் பங்கு பற்றி, நாட்டுக்கு நலம் பல புரியலாம் என்கிற எண்ணமே அவரது மிதவாதத்துக்கு ஆதாரமாக அமைந்திருந்தது. இப்படிப் பகுத்து தந்தையின் ஆரம்பகால அரசியல் மிதவாதம் பற்றி அறுதியிட்டுக் கூறியிருக்கிறார் ஜவஹர்.

நேரு கேம்பிரிட்ஜில் பயிற்சி பெற்று வரும் போதே மேற்படிப்புக்கு எத்துறைக் கல்வியை நாடலாம் என விவாதிக்கப்பட்டதாம். ஐ. ஸி. எஸ். படிக்கலாம் என்ற அபிப்பிராயமும் எழுந்ததாம். ஆனால் முடிவில் அந்த யோசனை கைவிடப்பட்டது. அதற்கு முக்கிய காரணம், ஐ. ஸி. எஸ். பாஸ் பண்ண வேண்டுமானால் அவர் மேலும் நான்கு வருஷங்கள் இங்கிலாந்திலேயே தங்க வேண்டியது அவசியமாகும். தங்களைப் பிரிந்து பல வருஷங்களைக் கழித்து விட்ட புதல்வர் அதிக காலம் அயல் நாட்டில் தனித்து வாழவேண்டுமே என்பதை எண்ணிக் கவலையுற்றனர். ஆகவே அவர் சட்டப் பயிற்சி பெற்றுத் தேர்ந்து சீக்கிரம் திரும்புவதே நல்லது என்று முடிவு செய்தனர்.

"அரசியலில் எனது அபிப்பிராயங்கள் தீவிரப் பாதை நோக்கி வளர்ந்து வந்த போதிலும், ஐ. ஸி. எஸ். பாஸ் செய்து, பிரிட்டிஷாரின் சர்க்கார் இயந்திரத்தில் ஓர் அங்கமாக மாறிவிடும் யோசனை அன்று எனக்குக்

கசப்பானதாகத் தோன்ருதது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. பல வருஷங்களுக்குப் பிறகு இதே யோசனை எனது வெறுப்பையே ஏற்றிருக்கும்" என்று 1936-ல் நேரு எழுதியிருக்கிருர்.

கேம்பிரிட்ஜில் பட்டம் பெற்று 1910-ம் வருஷம் அவர் லண்டன் நகர் அடைந்து சட்டக் கல்வி பயின்ருர். அதற்காக இரண்டு வருஷங்கள் லண்டனில் கழித்தார். அங்நாளைய அனுபவங்கள் அவருக்கு எவ்வித அபிவிருத்தியும் அளிக்கவில்லை. விடுமுறைக் காலங்களில் அவர் ஐரோப்பிய நகரங்களில் சுற்றுப்பிரயாணம் செய்து மகிழ்ந்தார்.

1910-ம் வருஷம் நேரு நார்வேயில் தங்கியிருந்த போது 'அவர் பிழைத்தது மறு பிழைப்பு' என்று சொல்லும்படியான சம்பவம் ஒன்று நிகழ்ந்து விட்டது. மலைப் பிரதேசங்களில் சுற்றித் திரிந்து, வேர்த்து விறுவிறுத்துப் போய் ஒரு சிறிய ஹோட்டலை அடைந்தனர் நேருவும் அவரது நண்பர்கள் சிலரும். குளிக்கும் வசதி அந்த ஹோட்டலில் இல்லை. ஆயினும் சற்றுத் தொலைவில் ஓடிய நீரோடையில் குளிக்கலாம் என்று அறிவிக்கப்பட்டது. நேருவும் இங்கிலீஷ்காரர் ஒருவரும் அந்த ஓடைநோக்கிச் சென்றனர். வேகமாக ஓடிப் பாய்ந்த அந்த நீரோடையில் ஆழம் அதிகமில்லை. ஆனல் வழுக்கு இருந்தது. குளிர் நடுக்கியது. நேருவின் கால் வழுக்கவே அவர் நீரில் விழுந்து விட்டார். ஐஸ் போல் குளிர்ச்சி பெற்றிருந்த தண்ணீர் அவர் உடலை விரைத்துப் போகும் படி செய்தது. அவரது அங்கங்கள் செயல் திறம் இழந்தன. எழுந்து காலூன்றி நிற்கமுடியவில்லை அவரால்.

தண்ணீர் அவரை அடித்துச் சென்றது. அவரது தோழர் சமாளித்துக் கரை ஏறி, ஓரமாகவே ஓடிச் சென்று நேருவின் கால்களைப் பற்றி இழுத்து வெளியேற்றிப் பாதுகாப்பளித்தார். எத்தகைய பேராபத்திலிருந்து நேரு காப்பாற்றப்பட்டார் என்பது பின்னர் தான் புரிந்தது. இருநூறு கஜ தூரத்துக்கப்பால் அந்நீரோடை குதித்துப் பாய்ந்து மலைமுகடு ஒன்றின் விளிம்பிலிருந்து பெரும் பள்ளம் நோக்கித் திடுமென விழும் அழகு அருவியாக மாறிவிடுகிறது. என்பதைக் கண்டார்கள். அவ்வட்டாரத்தின் அழகுச் செல்வம் அது. அது நேருவின் உயிரைப் பறிக்க இருந்ததே!

ஏழு ஆண்டுகளை இங்கிலாந்திலேயே கழித்து விட்ட நேரு 1912-ல் சட்டத் தேர்வு பெற்ற பிறகு இந்தியா திரும்பினார். இடைக்காலத்தில் அவர் இரண்டு தடவைகள் தாய்நாடு வந்து போயிருந்த போதிலும், இப்போது பம்பாயில் அடி எடுத்து வைத்த போது தாம் முற்றிலும் மாறிவிட்டது போன்ற தன்னுணர்வு மிகுந்தவராகத் தான் விளங்கினார் அவர்.

1912-ம் வருஷ இறுதியில் அரசியல் துறையில் தேக்கம்தான் நிலவியது. திலகர் ஜெயிலில் அடைபட்டுக் கிடந்தார். தீவிரவாதிகள் ஓய்ந்து ஒடுங்கிப் பம்மியிருந்தனர். உள் நாட்டு விவகாரங்கள் 'சுரத்' இல்லாமலிருந்தன. மிண்டோ மார்லி சீர்திருத்தம் என்ற கண்துடைப்பு காரணமாக மிதவாதிகள் திருப்தியுடன் காலந்தள்ளினார்கள். தென் ஆப்பிரிக்கப் பிரசனைதான் கொஞ்சம் பரபரப்பு அளித்து வந்தது. பங்கிப்பூரில் கூடிய காங்கிரஸ் சலவை மடிப்புக் குலையாத சட்டை வீரர்களும், ஆங்கில

ஞானம் பெற்ற மேன்மக்களும் சேர்ந்து ஆடிய ஓர் நாடகமாக முடிந்தது. தென் ஆப்பிரிக்கா சென்று திரும்பி யிருந்த கோகலே கவனிப்புக்குரிய தலைவராக விளங்கினர்.

ஜவஹர்லால் நேரு பங்கிப்பூர் காங்கிரஸில் ஓர் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். அவர் ஹைக்கோர்ட் வக்கீல் தொழிலை ஏற்றிருந்தார். ஏழு வருஷங்களுக்குப் பிறகு இந்தியாவுக்கு வந்ததும், ஆரம்பத்தில் அவருக்கு உற்சாகம் அதிகமாகத் தான் இருந்தது. நாளாக ஆகச் சுற்றுப் புறமும் விசேஷமற்ற வாழ்வும் சாரமில்லாதவை களாகவே தோன்றின

காந்திஜீ அரசியல் போராட்டத்தில் ஈடுபட்டு அரசியலைப் பொது ஜனத்தொடர்பு உடையதாக மாற்றி யிராத காலம் அது. மெத்தப்படித்த மேதாவிகளின் பொழுது போக்காகவும், பட்டம் பதவிகளுக்கு அஸ்தி வார மிடுவதாகவும் அரசியல் விளங்கி வந்தகாலம் அது. தேசியம் என்ருல் ஆளவந்த அந்நியரை எதிர்த்துப் போராடி உரிமையைப் பெறுவது என்ற உணர்வு பெற் றிருந்த ஜவஹருக்கு அந்நாளையில் அரசியல் துறையில் இடம் இருந்ததாகத் தெரியவில்லை, அவரும் காங்கிரஸில் அங்கத்தினராகி, அவ்வப்போது கூடிக் கலையும் கூட்டங் களுக் கெல்லாம் போய் வந்துகொண்டுதான் இருந்தார் எப்போதாவது அயல்நாடுகளில் இந்தியர் படுகின்ற அவதி களைக் குறித்த விவகாரங்கள் தலைதூக்கும் போது நேரு வெகு ஆர்வத்தோடு கலந்துகொள்வார். இத்தகைய சந்தர்ப்பங்கள் மிக அரியனதான்.

பொழுதுபோக்கி உல்லாசம் பெறுவதற்காக நேரு சிலசமயங்களில் வேட்டை ஆடச் செல்வது வழக்கம்.

காடுகளிலும் வெளிநிலங்களிலும் சுற்றுவதில்தான் அவர் அக்கறை காட்டினரே தவிர, மிருகங்களைச் சுட்டுத் தள்ளுவதில் அவர் சிரத்தை கொண்டாரில்லை. ஆகவே அவருடைய வேட்டை விவகாரங்கள் பலவும் ரத்தம் சிந்தாத கீர்த்திப் பிரதாபங்களாகத் தான் அமைந்தன. ஆனாலும் 'குருட்டாம் போக்கிலே' ஒரே ஒரு தடவை மட்டும் அவர் காஷ்மீர் கரடி ஒன்றைச் சுட்டுக்கொன்று விட்டாராம். அவருக்கு இருந்த 'கொஞ்ச நஞ்சம்' வேட்டை ஆர்வத்துக்குக்கூட முடிவு கட்டிவிட்டது, அவர் உள்ளத்தைத் தொட்ட ஓர் நிகழ்ச்சி.

ஓர் சமயம் வேட்டையாடச் சென்ற அவர்காலடியில் வந்து விழுந்தது காயம்பட்ட மான் ஒன்று. மரண வேதனை அனுபவித்துக் கொண்டிருந்த அந்த மானின் விழிகள் நேருவை நோக்கிப் பரிதாபமாக—நிலைத்து நின்றன. கண்ணீர் தேங்கிய தடங்கண்கள் நேருவின் உள்ளத்தைக் கலங்கவைத்தன. பிறருக்குத் தீங்கு நினையா அப்பிராணியின் துயர முடிவு அவர் இதயத்தை உறுத்தியது; நெடுநாள் வரை நீங்கா நினைவாக அவர் நெஞ்சில் குறுகுறுத்தது. அப்புறம் அவர் வேட்டையாடத் துணியவே இல்லை.

அந்நாட்களில்தான் கோகலே 'ஸெர்வன்ட்ஸ் ஆவ் இந்தியா சொஸைட்டி'யை நிறுவியிருந்தார். அதன் அங்கத்தினர்கள் சொல்ப ஊதியம் பெற்று சேவையையே பெரிதாக மதித்து, மிகுந்த ஈடுபாட்டுடன் பொதுப்பணி புரிந்து வந்ததை அறிந்து நேருவியந்தார், எனினும் அச் சபையில் சேர அவர் விரும்பவில்லை. அவர்களுடைய போக்கு மிகவும் மிதப்பண்புடையதாக இருந்தது ஒரு

காரணம். தனது வக்கில் தொழிலை அவர் துறந்துவிட விரும்பாதது மற்றொரு காரணமாம்.

உலகமகா யுத்தம் பிறந்தது. இந்தியாவிலும் பரபரப்பு தலைதூக்கியது. எங்கோ வெகுதொலைவில் தான் யுத்த தாண்டவம் நிகழ்ந்தது. அதன் கோரக்கொடுமைகள் இந்நாட்டைத் தொடக்கூட இல்லை. எனினும் சதிக் குற்றங்களும், துப்பாக்கிப் பிரயோகங்களும், ராணுவத் துக்குக் கட்டாயமாக ஆள்சேர்க்கும் முறைகளும் நாட் டிலே பரவின. வெளிப்படையாக உரத்த குரலெடுத்து பிரிட்டிஷாருக்கு விசுவாச கீதம் பாடினார்கள் ஜனங்கள். ஆனால் உள்ளத்திலே ஜெர்மனியின் வெற்றிச்சேதிகளை அறிந்து ஆனந்தக்களிப்பு பாடிக்கொண்டார்கள். இந் நாட்டினருக்கு ஜெர்மனிமீது திடீர் அபிமானம் பிறந்து விட்டதாகச் சொல்லமுடியாது. "நம்மை அடக்கி ஆளும் அந்நியன் மற்றொரு பலவான் கையிலே சிக்குண்டு திணறுகிறான். பாவி நன்றாக அனுபவிக்கட்டும்!" என் கிற தாராள மனோபாவம்தான் காரணம். பலவீனர்கள் இத்தகைய மனோபாவத்தால் தாமே வஞ்சம் தீர்க்கும் பொழுது பெறக் கூடிய மகிழ்வைப் பெற்று விடுவதாகக் கருதுகிறார். இதுவும் மனித சுபாவங்களில் ஒன்றுதான்.

மீண்டும் அரசியல் விழிப்பு ஏற்பட்டது நாட்டிலே. லோகமான்ய திலகர் சிறையிலிருந்து வெளி வந்ததும் 'ஹோம் ரூல் லீக்' ஆரம்பித்தார். அன்னிபெசன்ட் அம்மையாரும் ஒரு இயக்கம் தொடங்கியிருந்தார். ஜவஹர்லால் நேரு இரண்டிலும் சேர்ந்து பணியாற்றினர். பெசன்ட் அம்மையாரின் இயக்கத்துக்காகத் தான் அவர் அதிகம் பாடுபட்டார். அன்னிபெசன்டின் சேவைகள்

இந்திய அரசியலில் தீவிரமாகப் பங்கு பற்றி ஓங்கின. காங்கிரசின் வருஷாந்திரக் கூட்டங்களில் புதிய வேகமும் விறுவிறுப்பும் புகுந்திருந்தன. முஸ்லிம் லீக் காங்கிரசுடன் சேர்ந்து முன்னேறியது. அரசியல் சூழலில் ஓர் மின் சக்தி தோன்றி மிளிர்ந்தது. இந்தியாவின் வாலிப சமுதாயம் அதிக ஊக்கம் பெற்றனர். "கூடிய சீக்கிரம் மகத்தான காரியங்கள் சாதிக்கப்படும்" என்ற நம்பிக்கை பிறந்தது இளைஞர்களின் உள்ளத்திலே.

அன்னிபெசன்ட் அம்மையார் சிறையில் அடைக்கப் பட்டார். நாடு முழுவதும் பரபரப்புற்றது. ஹோம் ரூல் இயக்கம் எங்கும் பரவியது; பழைய தீவிர வாதிகளை ஈர்த்ததுடன் புதியபுதிய அங்கத்தினர்களையும் தன்வயப் படுத்தியது. மத்தியதர வர்க்கத்தினர் தான் இந்த இயக்கத் தில் ஆர்வம் காட்டினர். இவ் இயக்கம் மக்களின் இதயத் தைத் தொட்டதே இல்லை.

அன்னிபெசன்டைக் கைது செய்த செயல் முதிய தலைமுறையினரையும் நிமிர்ந்து உட்கார வைத்தது. மிதவாதத் தலைவர்கள் பலர் உணர்ச்சி பெற்றார்கள். எனி னும் முன் வந்து செயலாற்ற எவரும் துணியவில்லை. நாடு நல்ல தலைமையை எதிர்நோக்கிக் காத்து நின்றது. மாணவர்களுக்கும் வாலிப சமுதாயத்தினருக்கும் நற் போதனைகள் புரிந்து வந்த மிதவாதத் தலைவர் ஸ்ரீனிவாச சாஸ்திரி திட்டமிட்டு செயலாற்ற முனைவார் என இளை ஞர்கள் எதிர்பார்த்தார்கள். அவரோ மோனநிலையில் ஆழ்ந்து விட்டார்! மிதவாதத் தலைவர்களில் சிலர் ஏதோ செயல்புரியக் கிளம்பினர்; ஆனால் விரைவிலேயே பின் வாங்கி விட்டார்கள்.

ஜவஹரின் தந்தை மோதிலால் நேரு கொஞ்சம் கொஞ்சமாக மிதவாதக் கொள்கையை விலக்கிவிட்டுத் தீவிரம் பெற்று வந்தார். 1918-ல் கூடிய லக்ஷ்மணபுரிக் காங்கிரசில் அவர் தான் தலைமை தாங்கினார். அம் மகா சபையில் அரசாங்கத்தை எதிர்த்துத் தீர்மானங்கள் நிறை வேற்றப்படும் என்று உணர்ந்த மிதவாதிகள் காங்கிர ஸைப் பகிஷ்கரித்தனர். பிறகு தனி இயக்கமாகப் பிரிந்து விட்டார்கள்.

அந் நாட்களில் ஜவஹரின் பொதுப்பணியும் அரசி யல் சேவையும் சர்வசாதாரண நிலையில் தான் இருந்தன. பொதுக் கூட்டங்களில் பேசத் துணியாது ஒதுங்கி வந்தார் அவர். இந்திய ஜனத்திரளின் முன்னே இங்கிலீ ஷில் பேசினால் எடுபடாது; ஹிந்துஸ்தானியில் தெளிவாக நீண்ட பிரசங்கம் புரியத் தன்னால் இயலாது என அஞ்சி னார் அவர்.

1915-ல் தான் நேரு முதன் முதலாக பொதுக் கூட்டத்தில் சொற்பொழிவாற்ற முன்வந்தார். புதிய சட் டம் ஒன்றை எதிர்த்துப் பேசவேண்டிய அவசியம் ஏற் பட்டது. நேரு சுருக்கமாக ஆங்கிலத்தில் பேசி முடித்து விட்டார். நிகழ்ச்சிகள் முற்றுப் பெற்றதும் மேடை மீதே, மக்களின் கண்முன்னாலேயே, தலைவர் தேஜ் பகதூர் சாப்ரூ ஜவஹரை ஆறத் தழுவி உச்சி மோந்து பாராட்டி னார். நேரு என்ன பேசினார் அல்லது எப்படிப் பேசினார் என்பதற்காக அளிக்கப்பட்ட பாராட்டு அல்ல அது. நேரு பொதுக்கூட்டத்தில் பேச முன்வந்து விட்டார்; தேசிய இயக்கத்துக்கு மற்றுமொரு பிரசாரகர் கிடைத்து விட்டார் என்ற ஆனந்தப் பெருக்கு உந்திய செயல் அது.

இந்தியாவில் அரசியல் விழிப்பு ஏற்பட்டிருந்த ஆரம்ப நாட்களில் பேசுவதுதான் பெரிய சேவையாக மதிக்கப்பட்டது. செயல் திட்டமிட்டு எந்தத் தலைவரும் நல்ல வழிகாட்ட வில்லை. டாக்டர் சாப்ருவும், பண்டித மதன் மோகன மாளவியாவும் நாட்டு விடுதலைக்கு உரிய வழிகாட்டக் கூடும், காட்ட வேண்டும் என்று நேரு ஆசைப்பட்டார். அவர்களிடம் பேசி அவர்களைச் செயல் பாதையில் அடிஎடுத்து வைக்கும்படி ஜவஹர் தூண்டிக் கொண்டிருந்தார்.

மகனின் செயலைக் கவனித்து வந்த தந்தையின் உள்ளத்தில் கவலை படிந்தது. ஜவஹர் ஓயாது குறை கூறிக் கொண்டிருந்ததும், பேச்சு மட்டும் போதாது, செயல் திட்டங்கள் வேண்டும் என்று தலைவர்களைத் தூண்டி வந்ததும் சேர்ந்து "அவர் தீவிரவாதியாகி விட்டார். வங்காளத்தில் வாழ்ந்த பலாத்காரவாதிகளின் வழியைத் தான் நேருவும் பின்பற்றுகிறார் போலும்" என்ற எண்ணத்தையே உண்டாக்கின.

"செயல் புரிய வேண்டும். செயல் திட்டம் வேண்டும்" என்று ஜவஹர்லால் துடித்தாரே தவிர, என்ன காரியத்தை எப்படிச் செய்ய வேண்டும் என்ற தெளிவு அவருக்கும் இருந்ததில்லை தான், வங்கத்து இளைஞர்களின் பலாத்காரப் போக்கு நேருவுக்குப் பிடிக்கவில்லை. அவர்களது நடவடிக்கைகள் அவருக்குப் பெருத்த கவலையைத் தான் கொடுத்து வந்தன. மந்தமாக அடிமைத்தனத்தை ஏற்றுக்கொண்டு காலத்தை ஓட்டுகிற மிதவாதமும் அவருக்கு எரிச்சல் ஊட்டியது. ஆனால் அன்றையச் சூழ்நிலையில் வேறு எதுவும் செய்யமுடியாது என்றும் தோன்றியது.

அவருடைய தந்தையும் இத்தகைய மனக்குழப்பத்தை அனுபவித்துக் கஷ்டப்பட்டார். அன்னிபெசன்ட் அம்மையார் சிறையில் தள்ளப்பட்டதும், 1919–ல் பாஞ்சாலத்தில் நிகழ்த்தப் பெற்ற படுகொலையும் தான் அவரைத் தீவிரமாக அரசியலில் ஈடுபட்டு, தொழிலை உதறி எறியச் செய்து படுகளத்தில் குதிக்கத் தூண்டின. 1915 முதல் 1917 வரை அவர் உள்ளக்குழப்பம் அதிகரித்து வந்ததால் அடிக்கடி அவருக்கும் ஜவஹருக்கும் இடையே விவாதங்கள் சூடேறி விடுவது வழக்கமாயிற்று. மோதிலால் சீறிவிழுவதோடு தந்தை—மகன் சம்பாஷணைகள் முற்றுப் பெறுவதே இயல்பாயிற்று.

இருண்டு கிடந்த இந்திய அரசியல் வானிலே நம்பிக்கை ஒளி புகுத்த ஒரு ஜோதி பிறந்தது. அந்த ஜோதி தான் காந்திஜீ.

காந்திஜீயை ஜவஹர்லால் நேரு முதல் தடவையாகச் சந்தித்தது 1916–ம் ஆண்டு இறுதியில் நடைபெற்ற லக்ஷ்மணபுரிக் காங்கிரசின் போது தான். காந்தி தென் ஆப்பிரிக்காவில் நடத்திய போராட்டங்கள் காரணமாக இந்தியாவில் உள்ளவர்களது போற்றுதலைப் பெற்றிருந்தார். இந்திய தேசீயவாதிகள் அவரை வீரராக ஏற்றுக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் அவருடைய கொள்கைகளுக்கும் எண்ணங்களுக்கும் இந்திய அரசியலுக்குமிடையே பெரியபிளவு கிடக்கிறது ; இரண்டும் சேருவது சாத்தியமில்லை ; காந்தி அரசியல் உலகம் எட்டமுடியாத தொலைவிலேயே நிற்க விரும்புகிறார் என்றே பிறருக்குத் தோன்றியது. காந்திஜீயும் காங்கிரஸ் நடவடிக்கைகளிலோ, தேசீயப் பிரச்னைகளிலோ நேரடியாகக் கலந்து

கொள்ள அப்பொழுது தயாராக இல்லை தென் ஆப்பிரிக்கா சம்பந்தமான பிரச்னைகள் எழுந்த போது மட்டுமே தீவிரமாகப் பங்குகொண்டார் அவர்.

பின்னர் சம்பரான் என்னும் இடத்தில் பண்ணைக் கூலிகள் சம்பந்தமாக காந்திஜீ நடத்திய போராட்டங்களும், அவர் பெற்ற வெற்றிகளும் அரசியல் உலகில் மிகுந்த உற்சாகத்தை உண்டாக்கின. காந்திஜீ தமது சத்தியாக்கிரக முறைகளை இந்தியாவிலும் கையாளத் தயாராக இருக்கிறார்; அவரது முறைகள் குறிப்பிடத் தகுந்த வெற்றியையும் பெற்றுத் தருகின்றன எனும் உண்மைகள் எல்லோருக்கும் ஊக்கம் அளித்தன.

அச் சமயத்தில் கவிக்குயில் சரோஜினி நாயுடு நிகழ்த்தி வந்த வீரப் பிரசங்கங்களும் ஜவஹரின் உள்ளத்திலே கிளர்ச்சி உண்டாக்கின. தேசீயம், தாய்நாடுப் பற்று முதலிய விஷயங்களைக் குறித்து கவியரசி வீரமுழக்கம் செய்து வந்தார்.

அயர்லாந்தில் தோன்றிய சுதந்திரக் கிளர்ச்சியும், ஐரிஷ் ஈஸ்டர் புரட்சி'யின் முடிவும் இந்திய அரசியல் வாதிகளுக்கு அறிவு கொளுத்தும் சரித்திரச் சான்றுகளாக விளங்கின. இவற்றுடன், சிந்தனைச் சுடர்கள் மலிந்து கிடந்த அறிவுக் களஞ்சிகளையும். சிந்தனையாளர்களின் புதிய புதிய நூல்களையும் விடாது படித்து வந்ததால். ஜவஹரின் சிந்தனை நெருப்பும் 'கணகண' என்று ஒளிரத் தொடங்கிவிட்டது, அவருடைய ஆசைத் துடிப்புகள் அடக்க இயலாச் சக்தி பெற்றன.

அதனால் அவர் அனுஷ்டித்த வக்கீல் தொழில் மீது நேருவுக்கு வெறுப்பு உண்டாயிற்று. வக்கீல் தொழிலும்

அவரது தேசிய—பொதுப்பணி ஆர்வமும் ஒன்று சேர்ந்து வாழமுடியாது என்று கண்டார் அவர். அவர் தனது முழுநேரத்தையும், பூரணச் சக்தியையும் தாய் நாட்டின் விடுதலைக்காகச் செலவிட்டாக வேண்டும் என்று கருதினார்.

அப்பொழுது தான், கல்கத்தாவின் பிரபல வக்கீலாக விளங்கிய ஸர் ராஷ் பிஹாரி கோஷ் வக்கீல் தொழிலின் மேன்மை பற்றியும், அத்துறையில் நேரு எப்படி முன்னேறலாம் என்பது குறித்தும் தமது மேலான அபிப்பிராயங்களை உபதேசித்தார். சட்ட விஷயமாக ஒரு புத்தகம் எழுதும்படியும், வக்கீல் தொழிலைப் புதிதாக ஏற்றுள்ள நேரு முன்னேறுவதற்கு அது தான் சுலபமான மார்க்கமாகும் என்றும் கோஷ் ஆலோசனை கூறினார். தாமே புத்தகங்களுக்குத் தேவைப்படுகிற 'ஐடியா'க்களை அவ்வப்போது வழங்கி, ஆவன செய்வதாவும் உறுதிகூறினார். ஆயினும் அவருடைய பேச்செல்லாம் வீண் உபதேசங்களாகவே முடிந்தன. காரணம், நேருவுக்கு சட்டங்கள் சம்பந்தமான புத்தகங்கள் எழுதுவது என்கிற எண்ணமே 'எட்டிக் காயாக' இருந்தது தான்! "எனது காலத்தையும் சக்தியையும் சட்டங்கள் பற்றிய புத்தகங்கள் எழுதுவதில் பாழாக்குவது போன்ற வெறுப்பான விஷயம் வேறு எதுவும் இருக்கமுடியாது" என்ற கருத்து தொனிக்கும்படி நேரு சுயசரிதையில் குறித்து வைத்திருக்கிறார்.

1916-ம் வருஷம் 'வசந்த பஞ்சமி' தினத்தில்—இந்தியாவில் வசந்த காலத்தின் வருகையைக் கொண்டாட அமைந்த சுபதினத்திலே—டில்லி நகரில் ஜவஹர்லால்

நேருவின் வாழ்க்கையிலும் வசந்தம் வந்தது. அன்று தான் அவருக்கும் கமலாவுக்கும் திருமணம் நிகழ்ந்தது.

அவ்வருஷத்திய கோடை காலத்தை நேருவின் குடும்பத்தினர் காஷ்மீரில் கழித்தனர். குடும்பத்தினரைப் பசுமைப் பள்ளத்தாக்கில் தங்கியிருக்க விட்டுவிட்டு, நேரு உறவினர் ஒருவருடன் மலைப்பரப்பின் அழகுச் செல்வங்களை எல்லாம் கண்டு களிக்கக் கிளம்பினார். பல வாரங்கள் சுற்றித் திரிந்து மகிழ்ந்தார். மலை முகடுகளிடையேயும், குறுகிய தடங்களிலும், எழில் பதுங்கிக் கிடக்கும் பள்ளத் தாக்குகளிலும் அலைந்து களித்தார். இந்த அனுபவம் பற்றி அவர் அழகாக எழுதியிருக்கிறார்.

"உலகின் உச்சியாய் தனிமையில் குறுகியும் நீண்டும் கிடந்த பள்ளத்தாக்குகளில் திரியும் அனுபவம் எனக்கு அப்பொழுதுதான் முதன்முதலாகக் கிட்டியிருந்தது. திபெத் பீடபூமிக்கு இட்டுச் சென்ற பாதைகளில் நடந்தோம். ஸோஜி—லா கணவாயின் மேலே மிக உயரத்தில் நின்று, ஓர்புறம் வளமார்ந்த பசும்வெளிகள் பரந்து கிடப்பதையும், மறுபக்கம் வறண்ட கரடுமுரடான பாறைகள் நிற்பதையும் கண்டோம். இருபுறமும் சுவர்கள் போல் மலைப்பகுதிகள் ஓங்கி உயர்ந்து நிற்க, பனி மூடிய மலைமுகடுகள் ஓர் கோணத்திலே சதா காட்சி அளித்து மிரள, சிறுசிறு பனிப் பாறைகள் எங்களைச் சந்திக்க வருவதுபோல் சறுக்கி வழுக்கி ஓடிவர, குறுகிய தடங்களின் வழியாக நாங்கள் உயரே, உயரே, இன்னும் உயரமாகப் போய்க் கொண்டிருந்தோம். குளிர் காற்று உடலில் குத்தி எடுத்தது. ஆனால், பகல் வேளைகளில் கதிரொளி கதகதப்பாக இருந்தது. எங்கும்

கவிந்திருந்த ஆகாய வெளி மிகத் தெளிவாகத் திகழ்ந்த தால், பொருள்களுக்கிடையே உள்ள தூரம் பற்றிய கணிப்பிலே அடிக்கடி நாங்கள் தட்டுக்கெட நேர்ந்தது. உண்மையில் மிகத் தொலைவில் இருந்த பொருள்கள் பல மிக அருகாமையில் இருப்பது போன்ற பிரமை ஏற்பட்டது. தனிமை கனத்தது. எங்களுடன் தோழமை பூண அங்கு மரங்களோ, வேறு தாவர இனங்களோ இல்லை. கொடிய பாறைக் கற்கள் கண்களை உறுத்தி நின்றன. வெண் பனியும், உறைந்த பனிக்கட்டிகளும் மல்கிக் கிடந்தன. அபூர்வமாக எப்போதாவது புஷ்பங்கள் தோன்றி உவகை தந்தன. எனினும், நிர்மானுஷ்யம் பாழ்மையும் கவிந்து கிடந்த இயற்கையின் இத் தனி வெளிகளிலே நான் அபூர்வமான ஓர் ஆனந்தம் பெற்றேன். என் உடம்பிலே புதுச் சக்தியும் உள்ளத்தில் ஓர் மேம்பாடும் புகுந்து நிறைந்துவிட்ட உணர்வு எனக்கு ஏற்பட்டது.''

முதல் தடவை இவ்வித ஊக்கமும் உற்சாகமும் பெற்ற ஜவஹர்லால் சௌகரியமும் சந்தர்ப்பமும் வாய்த்த போதெல்லாம் காஷ்மீர மலைவெளிகளில் சுற்றி ஆனந்தம் பெறுவதில் ஆர்வம் காட்டி வந்தது. அதிசயம் இல்லைதான்.

## அத்தியாயம்-4.

முதலாவது உலக யுத்தம் முடிந்துவிட்ட பிறகு, இந்தியாவின் நிலைமையிலும் ஒரு மாறுதல் காணப்பட்டது. தொழில் அபிவிருத்தி ஏற்பட்டு, முதலாளிவர்க்கம் பணபலம் பெற்று வளர்ந்திருந்தது, யுத்தகாலத்தில்

கொள்ளையடித்து ருசிகண்டிருந்த ஒரு சிலர் மேலும் பணம் சேர்க்கவும் சமுதாயத்தை ஆட்டிவைக்கும் சக்தியை வளர்க்கவும் துடித்தனர். பேராசை வெறி பிடித்த இவர்களால் அமுக்கி நசுக்கப்பட்ட சமூகத்தின் மிகப்பலர் தங்களை அடக்கி ஒடுக்குகிற நாசச்சுமைகள் நீங்க வழி பிறக்காதா, என்று ஏங்கித் தவித்தார்கள். மத்தியதர வர்க்கத்தினரோ அரசியலில் பெரும் மாறுதல் ஏற்பட்டு சுயநிர்ணய உரிமைகள் கிடைத்து விடும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். சுதந்திரம் கிடைத்தால், தங்கள் வளர்ச்சிக்குச் சாதகமான வழிகள் பல தாமாகவே திறக்கப் பட்டுவிடும் என்று அவர்கள் நம்பியிருந்தார்கள். சட்டபூர்வமான கிளர்ச்சிகளும், அரசியல் உரிமைப்போராட்டங்களும் இந்தியா பூராவும் பரவி இருந்தன. ஆகவே நாட்டினர் சுயேச்சை, சுயாட்சி, பிறப்புரிமை என்றெல்லாம் பேசி மகிழ்ந்து வந்தார்கள்.

இந்த மனப்புழுக்கம் சில பிரதேசங்களிலுள்ள விவசாயிகளிடையே முற்றித் தனிப்பட்ட செயல் முறைகளிலே வெடித்தது. பஞ்சாப் மாகாணத்தில் அமுல் நடத்தப்பெற்ற கட்டாய ராணுவஆள் சேர்ப்பு முறை விதைத்திருந்த கசப்பு ஒடுங்காமல் வளர்ந்துகொண்டிருந்தது. பட்டாளத்தில் சேர்க்கப்பட்டு கப்பல்களில் வெளிநாடு சென்று மீண்ட வீரர்கள் இப்போது அதிகாரிகளின் ஆக்கினைக்குத் தகுந்தாற்போல் ஆடும் பாவைகளாக விளங்கவில்லை. அவர்கள் மனப்பண்பு பெரிதும் வளர்ச்சியுற்று விட்டது. அதனால் அவர்களிடையே அதிருப்தியும் வளர்ந்தது.

இந்த விதமாக இந்தியாவின் பலதரப்பட்ட மனிதர்களும் எதையோ எதிர்பார்த்தார்கள் ; காத்திருந்தார்கள்; ஆசையும் நம்பிக்கையும் கொண்டிருந்தார்கள். அதே சமயத்தில் அச்சமும் கவலையும் பதுங்கி உறைந்தது அவர்கள் நெஞ்சிலே.

ஆளும் இனம் இவற்றை எல்லாம் உணராமல் இருக்கமுடியுமா ? போட்டார்கள் ஊரடங்குச் சட்டங்களை. திட்டினார்கள் ' ரௌலட்பில் 'களை. சட்டம் உறுதி கூறும் பாதுகாப்புகளைப் பற்றி அவர்கள் கவலைப்பட வில்லை. இஷ்டப்பட்டால் யாரையும் கைதுசெய்யலாம். விசாரணை இல்லாமலே ஜெயிலில் தள்ளலாம் என்றெல்லாம் அவர்களுக்கு உரிமை அளித்தது ' ரௌலட்பில் '. புகைந்துகொண்டிருந்த இடத்திலே பெருநெருப்பு பற்றும்படி பெட்ரோலைக் கொட்டியது போலாயிற்று அரசினரின் போக்கு. கோபக்கொதிப்பு அலை இந்தியா பூராவும் மோதி எழுந்தது. எல்லோரும் எதிர்த்தார்கள். சர்க்கார் தயவைப்பெற விரும்பிய மிதவாதிகள் கூட எதிர்ப்புக் காட்டினார்கள். ஆனாலும் ஆளவந்த அந்நியர்கள் தங்கள் இஷ்டம்போல் சட்டம் செய்து தீர்த்தார்கள். மூன்று வருஷங்கள் இந்நிலை நீடித்தது. இந்திய சரித்திரத்திலேயே முக்கியமான கட்டம் அது. 1857 இந்தியப் புரட்சிக்குப் பிறகு இந்நாடு அவ்விதப் பெருங்குழப்பம் அனுபவித்தது இம்மூன்றாண்டுகளில்தான் என்று நேரு எழுதியிருக்கிறார்.

அப்பொழுது 1919-ம் வருஷம்...

அவ்வருஷ ஆரம்பத்தில் காந்திஜீ கடுமையானநோய் வாய்ப்பட்டு படுத்த படுக்கையாகக் கிடந்து தேறியிருந்

தார். அங்கிலேயிலும் அவர் வைஸிராய்க்கு ஒரு கடிதம் எழுதினுர். ராஜப்பிரதிநிதி புதிய ரௌலட்பில்களுக்குத்தன் ஆமோதிப்பை அளித்து, அதைச் சட்டமாக்க வேண்டாமென்று காந்திஜீ கெஞ்சிக் கேட்டிருந்தார். வைஸிராய் வேண்டுகோளைப் புறக்கணித்து விடவே, காந்திஜீ அகில இந்திய போராட்டம் ஒன்றைத் துவக்கித் தலைமை வகித்து நடத்த உறுதி கொண்டார்.

சத்தியாக்கிரக சபை ஒன்றை நிறுவினுர் காந்தி. ரௌலட் சட்டத்தையும், மேற்கொண்டு பிறப்பிக்கப் படக் கூடிய சகல சட்டங்களையும் மீறுவது, ஜெயில் வாசத்தை வலிய ஏற்பது என்கிற வைராக்கியம் பூண வேண்டும் அச்சபையின் அங்கத்தினர்கள்.

இந்தச் செய்தியைப் பத்திரிகைகளின் மூலம் அறிந்த ஜவஹர்லால் நேரு களிபேருவகை எய்தினுர். நாட்டில் நிலவிய தேக்கநிலே மாற ஒரு வழி பிறந்து விட்டது; அது நேரடியாக எதிர்க்கும் போராட்டமாகவும் இருந்தது. ஆகவே, சத்தியாக்கிரக சபையில் உடனடியாகச் சேர்ந்து விடுவது என்று உற்சாகத்தோடு தீர்மானித்தார் நேரு. அவருடைய உற்சாகத்தியிலே பச்சைத் தண்ணீர் கொட்டப்படும் என்று அவர் எதிர்பார்க்க வில்லை !

மோதிலால் நேரு இப்புதிய திட்டத்தை ஆர்வமுடன் வரவேற்க வில்லை. புதிய யோசனை எதையுமே அவர் சந்தேகக் கண்ணோடுதான் நோக்கினுர். தீரயோசித்து முடிவுகாணும் பண்புடைய தந்தை சத்தியாக்கிரக சபையைப் பற்றிச் சிந்திக்கச் சிந்திக்க அதன்மீது விருப்பமின்மையே உண்டாயிற்று அவருக்கு. தனது செல்வ

மகன் ஜெயில்வாசம் அனுபவிக்க நேரிடுமே என்கிற எண்ணம் அவர் இதயத்தை உலுக்கியது. இருவரிடையும் மனவேற்றுமை நீடித்தபோதிலும் சுமுகமாகப் பழகவே முயன்றனர். ஜெயிலில் தரையில்தான் படுத்துறங்க வேண்டியிருக்கும்; அந்த அனுபவம் எத்தனைக்கஷ்டம் விளைவிக்குமோ என்ற கவலை தந்தையைப் பெரிதும் வாட்டியது, அதன் தன்மையை உணர்வதற்காக மோதிலால் சில இரவுகள் வெறுந்தரையில் படுத்துத் தூங்க முயன்றார் என்கிற விஷயம் புதல்வருக்குப் பின்னர்தான் புரிந்தது. இதிலிருந்தே தந்தை மகனிடம் கொண்டிருந்த அன்பின் அளவை ஓரளவு உணரலாமன்றோ ?

எப்படியும் சத்தியாக்கிரக இயக்கத்தில் பங்கு கொள்வது என்று ஜவஹர்லால் முடிவு செய்து விட்டார். மோதிலால் நேரு காந்திஜீக்குக் கடிதம் எழுதி அவரை அலகாபாத்துக்கு வரவழைத்தார். இருவரும்நெடு நேரம் பேசினார்கள். என்ன பேசினார்கள் என்பது நம் நேருவுக்குத் தெரியாது. முடிவில் காந்திஜீ ஜவஹரிடம் அவசரப்பட வேண்டாம் என்றும், தந்தைக்கு மனக் கஷ்டம் தரக்கூடிய முறையில் நடந்து கொள்ள வேண்டாம் என்றும் ஆலோசனை கூறினார். காந்திஜீயின் புத்திமதி ஜவஹருக்கு வருத்தம் அளிக்கத் தான் செய்தது.

ஆனாலும், எதிர்பாராது நிகழ்ந்த சம்பவங்கள் அவரது பிரச்னைக்கு முடிவு கட்டி விட்டன. சத்தியாக் கிரக சபை திடீரென்று தனது போராட்டத்தை நிறுத்திக் கொண்டது.

அகில இந்திய ஹர்த்தால்கள்; வியாபாரத்துறையில் பெருந்தேக்கம்; டில்லியிலும் அமிருதசரசிலும் போலீசாரும்ராணுவத்தினரும் நடத்திய துப்பாக்கிப் பிரயோகங்கள்; ஜாலியன்வாலா பாக்படுகொலை; பஞ்சாபில் ஊரடங்குச் சட்டம்; எங்கும் பீதி, பரபரப்பு. அடக்கு முறை, தடியடி தர்பார்—இந்தவிதமாக இந்தியா படாத பாடு பட்டது.

பஞ்சாப் படுகொலையும், அது சம்பந்தமான விசாரணைகளும் மோதிலால் நேருவின் மனப் பண்பை அடியோடு மாற்றிவிட்டன. மிதவாதப் போக்கில் அதிருப்தி கொண்டிருந்த தந்தை 1919-ம் வருஷ ஆரம்பத்தில் 'இண்டிப்பெண்டன்ட்' என்றபத்திரிகையைத் தொடங்கி சொந்தப் பொறுப்பில் நடத்தி வந்தார். அது வெற்றிகரமாக ஓடிக்கொண்டிருந்தது. ஜவஹர் தான் பத்திரிகையின் நிர்வாகப் பொறுப்பை கவனித்து வந்தார், பஞ்சாப் விவகாரங்கள் தந்தையையும் மகனையும் அப்பிரதேசத்துக்கு இழுத்துச் சென்றன. அச் சந்தர்ப்பத்தில் பத்திரிகை நிலைமை சீர்குலைய நேரிட்டது. பிறகு தேறவே இல்லை. அவ்வப்போது பிரகாசமான பருவங்கள் தலை தூக்கினாலும் பத்திரிகை தெம்புடன் வாழ வழியில்லாது போயிற்று. இரண்டு பேரும் சிறை வாசம் அனுபவிக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டதும், 1923 ஆரம்பத்திலே பத்திரிகை உயிரை விட்டுவிட்டது.

1919-ல் கூடிய அமிருதசரஸ் காங்கிரஸின் தலைவர் மோதிலால்நேரு தான். அது தான் முதல் 'காந்தி காங்கிர' சும் கூட. திலகரும் அதில் கலந்து முக்கிய பங்கெடுத்துக் கொண்டார். என்றாலும் காங்கிரஸ் பிரதி

நிதிகளும், வெளியிலுள்ள மக்கள் கூட்டமும், காந்தியின் தலைமைக்காகவே காத்திருந்தனர். மகாத்மா காந்திக்கு ஜே!' என்ற கோஷம் அரசியல் வானிலே அதிறத் தொடங்கியது அத்தக் காங்கிரஸிலிருந்து தான்.

1920-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று காந்திஜீ கிலாபத் இயக்கம் சம்பந்தமாக ஒத்துழையாமைப் போராட்டத்தைத் துவக்கத் திட்டமிட்டிருந்தார். அன்று காலையில் தான் பம்பாயில் திலகர் இறந்து போனர். ஸிந்து மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டு காந்திஜீயும் ஜவஹர்லாலும் அன்று தான் பம்பாய் வந்து சேர்ந்திருந்தனர். பம்பாய் நகரமே ஒருங்கு திரண்டு தங்கள் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமான தலைவர் திலகருக்கு இறுதி மரியாதை செய்தது. அச் சடங்கிலே காந்தியும் நேருவும் கலந்து கொண்டனர்.

## அத்தியாயம்—5

பல வருஷங்கள் வரை நேருவின் அரசியல் நடவடிக்கைகளில் பூர்ஷ்வாப் பண்பே ஓங்கியிருந்தது. தொழிலாளர்கள், விவசாயிகள் பிரச்னைகளைக் குறித்து அன்றைய அரசியல் தலைவர்கள் சிந்தித்ததே இல்லை. பத்திரிகைகளும் அந்த வர்க்கத்தினரைப் பற்றிய செய்திகளுக்குக் கூட இடமளித்ததில்லை.

" 1920-ம் வருஷம் வரை, பாக்டரிகளிலும் வயல்களிலும் உழைத்து வந்தவர்களின் வாழ்க்கைத்தரம் பற்றி நான் ஓர் சிறிதும் அறிந்ததில்லை. எனது அரசியல் நோக்கு முழுக்கமுழுக்க பூர்ஷ்வாத்தன்மையே பெற்றி

ருந்தது. நாட்டிலே பயங்கரமான வறுமையும், துயரமும் நீடிக்கிறது என்பது மட்டுமே எனக்குத் தெரியும். அரசியல் உரிமை பெற்றுவிடுகிற சுதந்திர இந்தியாவின் முதல் கடமை நாட்டின் வறுமையை ஒழித்துக் கட்டு வதுதான் என்ற உணர்வு பெற்றிருந்தேன். சுதந்திரம் கிடைத்தவுடன் மத்தியதர வர்க்கத்தினர் சுபிட்சவாழ்வு பெறவேண்டும், அது தானுகவே நேர்ந்துவிடும் என்று தோன்றியது. பீகார் மாகாணத்தில் உள்ள சம்பரானிலும் குஜராத்தில் உள்ள கெய்ராவிலும் காந்திஜீ நடத்திய விவசாயப் போராட்டங்களுக்கு அப்புறம்தான் நான் குடியானவர் பிரச்னைகளைக் கவனிக்கத் தொடங்கி னேன்" என்று நேரு எழுதியுள்ளார்.

1920-ம் வருஷம் மே மாதம் ஜவஹரின் தாயாரும் மனைவி கமலாவும் உடல் நலக் குறைவு காரணமாக முசெளரியில் தங்கியிருக்க நேர்ந்தது. ஆப்கானிய யுத்தத் துக்குப் பிறகு பிரிட்டிஷாருக்கும் ஆப்கானியருக்கு மிடையே சமாதான ஒப்பந்தம் பற்றிய பேச்சு வார்த்தை கள் நடந்து கொண்டிருந்த காலம் அது. ஆப்கானியப் பிரதிநிதிகள் முசெளரியில் முகாமிட்டிருந்தனர். அவர் களுடன் எவ்விதத் தொடர்பும் கொள்வதில்லை என நேரு உறுதி மொழி தர வேண்டும் என்று அரசினர் கோரினர். நேரு மறுத்தார் அதனால் அவர் முசெளரியை விட்டு உடனடியாக வெளியேற வேண்டும் என்று உத்திரவு பிறப்பிக்கப்பட்டது. நேரு டெஹ்ரா டன் ஜில்லாவி லிருந்து நீங்கி அலகாபாத்தில் இரண்டு வார காலம் தங்கி யிருந்தார். இடைக்காலத்தில் ஆட்சியினரும் தங்கள் மனதை மாற்றி உத்திரவை வாபஸ் பெற்று விட்டனர்.

அந்த இரண்டு வாரத்திலும் நேருவுக்கு வேறு அலு வல்கள் இல்லையாகையால், அவர் கிஸான் இயக்கத்தில் ஆர்வம் காட்டுவதற்குரிய வாய்ப்புக் கிட்டியது.

அலகாபாத்திலுள்ள பிரபல அரசியல்வாதிகளின் கவனத்தைக் கவர்ந்து, தங்கள் குறைகளை அவர்களிடம் முறையிட்டு ஆதரவு பெறும் நோக்கத்தோடு, சுமார் இருநூறு குடியானவர்கள் பர்தாப்கர் ஜில்லாவைச் சேர்ந்த ஊர்களிலிருந்து கிளம்பி ஐம்பது மைல் தூரம் நடந்து நகரை வந்தடைந்தார்கள். ராமச்சந்திரன் என்பவர் தலைமை தாங்கி தனிப்பட்ட முறையில், அரசியல் தலைவர்களின் தொடர்போ ஆதரவோ இல்லாமல், கிஸான் இயக்கத்தைக் கொஞ்ச காலம் நடத்தி வந்தார்.

அலகாபாத்துக்கு நடந்து வந்த விவசாயிகளை நேரு சந்தித்து அவர்கள் துயரங்களைப் பற்றி விசாரித்தார், அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, நேருவும் வேறு சிலரும் கிராமங்களுக்கு விஜயம் செய்தனர், ரயில் வேத் தொடர்போ, ரஸ்தாப் போக்கு வரத்தோ இல்லாத பல இடங்களிலும் அலைந்து திரிந்து மக்களின் அன்றாட வாழ்க்கையையும் அவதிகளையும் கண்ணுறக் கண்டார்கள். குடியானவர்களின் ஆர்வமும் துடிப்பும் நேருவுக்கு ஊக்கமளித்தன. ஊர் தோறும் திரள் திரளாக மக்கள் கூடினர். அன்பைச் சொரிந்தனர். நம்பிக்கையோடு தலைவர்கள் முகத்தையே பார்த்து. அவர்கள் சொற்களைக் கேட்டு, நன்றியும் காட்டினர்.

கிராமவாசிகளின் துயர வாழ்வும், அவர்கள் காட்டிய அன்பு உணர்வும் நேருவின் உள்ளத்தில் ஆழமாகப்

பதிந்தன, தனது நிலைக்காக வெட்கினுர் அவர். அவருக்குத் தன் மீதே பரிதாபம் ஏற்பட்டது. நாட்டிலே ஆயிரமாயிரம் மக்கள் சகிக்கவொண்ணுத நிலையில் அவதியுற்று வாழும்போது, தான் ஆடம்பர வாழ்வு வாழ்ந்து கொண்டு, அரசியல் என்ற பெயரால் மேலோட்டமான காரியங்களைக் கவனிப்பதோடு நின்று விட்டதை நினைத்து அவர் வெட்கமும் துக்கமும் கொண்டார். இந்தியாவின் அரைநிர்வாண மக்களும், அரைப்பட்டினி ஜனசமுதாயமும் அவர் கண்முன்னே இதுவரை :அவர் காணத்தவறிவிட்ட புதியதோர் சித்திரமாக விஸ்வரூபம் எடுத்து நின்றனர். உடையற்று, உணவற்று உரிமையற்று நசுக்குண்டு அவல வாழ்வு வாழும் இந்தியாவைக் கண்டுபிடித்து விட்டார் நேரு. சும்மா பார்த்துப் போக வந்த அவரிடம் மக்கள் கொண்டு விட்டநம்பிக்கை நேருவின் உள்ளத்திலே புதிய கடமை உணர்வைத் தூண்டியது. அதுவே அச்சத்தைக் கொடுத்தது.

பலருடன் பேசி, பலரது முறையீடுகளையும் கேட்டு, கிராமவாசிகளின் உண்மை நிலைமையையும், அவர்களைச் சுரண்டிக் கொழுக்கின்ற மனிதக் கழுகுகளின் தன்மைகளையும் இனங்களையும் பற்றி விரிவாக அறிந்து கொண்டார். மூன்று நாட்கள் கிராமங்களில் தங்கிவிட்டு அலகாபாத் திரும்பிய நேரு, மீண்டும் கிராம யாத்திரையைத் தொடர்ந்தார். அவர் மற்றும் சிலருடன் கிராமம் கிராமமாகச் சென்று, மண் குடிசைகளில் தங்கி, குடியானவர்களோடு உண்டு உறங்கி, மணிக் கணக்கிலே பேசி, பெரிதும் சிறிதுமான பொதுக் கூட்டங்களில் சொற்பொழிவாற்றி, மக்களின் நம்பிக்கையை வளர்த்தார்.

சிறிய கார் ஒன்றிலே தான் அவர்கள் சுற்றினார்கள், சரியான ரஸ்தாக்கள் இல்லாத இடங்களிலே குடியான வர்களே இரவோடு இரவாக, தற்காலிகமான பாட்டை களை அமைத்தார்கள். அடிக்கடி கார் மண்ணில் பதிந்து விடும். அப்போதெல்லாம் கிராமவாசிகள் உற்சாகமாகத் தோள் கொடுத்துக் காரைத் தூக்கி முன்னால் கொண்டு போய் விட்டு விடுவார்கள், நேருவின் கோஷ்டி சென்ற இடங்களுக் கெல்லாம் நிழல் போல் போலீஸாரும் தொடர்ந்தனர். தலைவர்களின் வேகமும் ஓயாத சுற்றுப் பிரயாணமும் போலீஸின் திறமையைப் பரீட்சிக்கும் பெரிய சோதனைகளாகந்தான் விளங்கின.

அது கடுங்கோடைப் பருவம். வெயில் சுட்டெரித் தது, கண்களைக் கூசச் செய்தது. வெயிலில் வெளி இடங் களில் சுற்றிப் பழகியவர் அல்லர் நேரு. இங்கிலாந்தி லிருந்து திரும்பி வந்த பிறகு ஒவ்வொரு கோடை காலத் தையும் சுகவாச ஸ்தலங்களிலேயே அவர் கழித்து வந் தார். இப்போதோ உணர்ச்சிப் பெருக்கோடு அவர் தலை யிலே தொப்பிகூட இல்லாமல், சாதாரணத் துண்டைச் சுற்றிக் கொண்டு, திறந்த வெளிகளிலே, எரிக்கும் சூரிய உஷ்ணத்தை ஏற்றுக் கொண்டு திரிந்தார். சூடோ குளிரோ தன் உடலை எவ்வகையிலும் பாதிக்கவில்லை என உணர்ந்து பெருமிதம் அடைந்தார்.

நேருவிடம் இயல்பாகக் குடிகொண்டிருந்த கூச்சத் தைக் குடியானவர்கள் போக்கடித்து விட்டார்கள். பொதுக் கூட்டங்களில் பேசுவதற்குப் பயிற்சி அளித்த வர்கள் அவர்கள் தான். நேரு, அவர்களிடம் பேசாமல் தீராது. பேசியே ஆக வேண்டிய நெருக்கடிகள் ஏற்பட

வும் அவர் ஹிந்துஸ்தானியில் தான் தனது எண்ணங்களை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியிருந்தது. மேடைப் பிரசங்க பாணிகள் எல்லாம் அவர்களுக்குத் தேவையுமில்லை ; புரியவும் புரியா. ஆகவே மனிதனுக்கு மனிதன் பரஸ்பரம் மனம் விட்டுப் பேசுவதுபோல, நேரு அவர்கள் மத்தியிலே தன் உள்ளத்தில் தோன்றிய எண்ணங்களை எடுத்துச் சொன்னார். நல்ல பேச்சாளராக வளர்ந்துவிட்டார்.

பிறகு அடிக்கடி நேரு கிராமப் புறங்களிலே பணி புரிவதில் ஆர்வம் காட்டினார். காங்கிரஸ் தொண்டர்களும் தங்கள் லட்சிய கோஷங்களை கிராமங்கள் தோறும் ஒலிக்கச் செய்தார்கள். விவசாயிகளும் உரிமைக் கிளர்ச்சிகளில் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொண்டார்கள். அஹிம்சை என்கிற லட்சியத்தை மறந்து விட்டு அவர்கள் அவ்வப்போது பலாத்கார முறைகளில் ஈடுபட்டு விடுவதும், அதன் விளைவுகளை அனுபவித்தும் சகஜமாகி விட்டது.

கால ஓட்டத்திலே சம்பவங்கள் வேகமாகத் தோன்றத் தொடங்கின. அரசியல் போராட்டம் வலுப்பெற்று வளர்ந்தது. காந்திஜீ ' ஒத்துழையாமை ' இயக்கத்தை ஆரம்பித்து வைத்தார். மோதிலால் நேரு தமது தொழிலை உதறிவிட்டு எளிமை வாழ்வை ஏற்பது பற்றித் தீவிரமாகச் சிந்தித்துவந்தார். ஐரோப்பிய உடை நாகரிகம் காங்கிரஸ் வட்டாரத்திலே செல்வாக்கு இழந்து, கதராடை மேன்மையுறத் தொடங்கியது. காங்கிரஸின் கொள்கைகளும் அரசியல் நோக்கமும் புதிய கதியில் திரும்பின. அபிப்பிராய பேதம் கொண்ட தலைவர்கள் பலர்

விலகிநின்றனர். மத்தியதரவர்க்கத்தினரிலும் அடிப்படி யில் நின்றவர்களே பெரும்பாலும் காங்கிரஸில் சேர்ந்தார் கள். காங்ரஸின் ஒற்றுமையும் கட்டுப்பாடும் ஆத்மபலம் பெருகி வந்தன.

அதற்கு நேர்மாருக அரசினரின் பண்பு வளர்ந்தது. நீதி, தர்மம் முதலியவைகளைப் பற்றி அவர்கள் கவலைப் படவில்லை. தலைவர்களின் பண்பையோ, நாட்டு மக்களின் போக்கையோ, அவர்களது செயல்களின் பலா பலன் களைப் பற்றியோ சர்க்கார் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆங்கிலேயரின் உள்ளத்தில் குழப்பமும் கலவரமுமே கூத்திட்டன. பிரிட்டிஷ் ஆட்சி மீது மக் களுக்குப் பூரணமான வெறுப்பு ஏற்பட்டு விட்டது.

எங்கும் கிளர்ச்சிகளும், போராட்டங்களும் தலை தூக்கவே, சிறைச்சாலைகள் நிரம்பத் தொடங்கின. தலை வர்களும் தொண்டர்களும் சாதாரண ஜனங்களும் ஜெயி லில் தள்ளப்பட்டார்கள். "மக்களின் குழம்பிய சிந்தனை கள் ஆசைகள் ஆகியவற்றுக்குத் தெளிவான உருவம் தரும் சின்னமாக" விளங்கினுர் காந்திஜீ.

ஜவஹர்லால் நேருவின் ஊக்கம், உற்சாகம், உழைப்பு முதலியவற்றுக்கு ஒரு அளவே இருந்ததில்லை. நாட்டைக் குலுக்கிய இயக்கத்தோடு இயக்கமாக ஒன்றி விட்டார் அவர். புத்தகங்கள், நண்பர்கள், உறவுத் தொடர்புகள் எல்லாவற்றையும் மறந்து விட்டார் நேரு. மனைவி, மகள், குடும்ப விவகாரங்கள்—யாரும் எதுவும் அவர் சிந்தையில் படிந்து நிற்கவில்லை அக்காலத்தில். ஆபீஸ்களிலும், கமிட்டிகளிலும், பொதுக்கூட்டங்களி

லும், கிராமங்களிலும் தான் வாழ்ந்தார் அவர். நேருவுக்கு ஜனங்களைப் பிடித்துப் போயிற்று. ஜனங்களுக்கு நேரு விடம் விசேஷமான பற்றுதல் ஏற்பட்டு விட்டது.

1921-ம் வருஷ ஆரம்பத்தில் தனிப்பட்ட தலைவர் களை மட்டும் தான் கைது செய்து கொண்டிருந்தது அரசாங்கம், ஆனால் ஆண்டு இறுதியில் இந்தியாவுக்கு வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்வதாகத் திட்டம். அவருக்கு வரவேற்பு அளிக்கும் எல்லா விழாக்களையும் பகிஷ்கரிக்க உத்திரவிட்டது காங்கிரஸ். "இந்தியா பூராவுமே ஒரு பெரிய சிறைச்சாலைதான். அடிமை விலங் கைத் தகர்த்தெறிய வேண்டியது காங்கிரஸின் வேலை" என்று கர்ஜித்தார் தலைவர் ஸி. ஆர். தாஸ். காங்கிரஸின் சவாலை ஏற்பது போல் சர்க்கார் காரியங்கள் செய்தது. கும்பல் கும்பலாக ஆட்களை ஜெயிலுக்குள் தள்ளியது! 1921 டிசம்பர், 1922 ஜனவரி ஆகிய இரண்டு மாதங் களில் மட்டும் சுமார் முப்பதினாயிரம் பேர் சிறையில் தள்ளப்பட்டதாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது.

1921-டிசம்பரில் தான் ஜவஹர்லால் நேரு முதன் முதலாக சிறை அனுபவம் பெற்றார். தலைவர்களும் ஜனங் களும் ஜெயிலில் அடைபட்டுக் கிடந்தபோதும், காந்திஜீ யைக் கைது செய்யத் துணியவில்லை அரசாங்கம். அவ ரைக் கைது செய்தால் நாட்டில் பெருங்குழப்பம் ஏற்பட்டு விடுமே என்ற பயம் தான் காரணம்.

காந்திஜீ வழிகாட்டித்திட்டங்களிட்டு ஒத்துழையாமை இயக்கத்தை நடத்தி வந்து போது, 1922 பிப்ரவரியில் சௌரி சௌரா எனும் இடத்தில் சிலர் பலாத்கார முறை

களைக் கையாண்டுவிட்டனர். இதைக் காரணமாகக் காட்டி, காந்திஜீ திடீரென்று போராட்டத்தை நிறுத்தி விட்டார்.

இச் செய்தி எல்லோருக்குமே அதிர்ச்சி கொடுத்தது. தலைவர்கள் கோபம் கொண்டனர். நேருவுக்கு காந்திஜீ மீது கோபமும், அவர் கொள்கைகளில் பெருந் தவறு இருக்கிறது. என்ற எண்ணமும் ஏற்பட்டன.

அரசாங்கம் நிம்மதியடைந்தது. ஒரு சிலவாரங்களி லேயே காந்திஜியைக் கைது செய்து, நீண்ட காலச் சிறைத் தண்டனை அளித்து மகிழ்ந்தது.

அக்காலத்தில் தான் மோதிலால் நேருவும் சிறை வாச அனுபவம் பெற நேர்ந்தது. தந்தைக்கும் மகனுக்கும் ஆறுமாத சிறைவாசம் விதிக்கப்பட்டது.

ஆனல், மூன்று மாதம் முடிந்ததும் ஜவஹர் விடு தலை செய்யப்பட்டார். அலகாபாத்திற்குத் திரும்பிய நேரு காங்கிரஸ் ஸ்தாபனம் சரியாகச் செயல் புரியாமல் தூங்கி வழிந்ததைக் கண்டு வருந்தினர். தான் தீவிரமாக ஏதாவது செயல் புரிய வேண்டும் எனத் துணிந்து, விதேசித் துணி பகிஷ்காரத்தில் ஈடுபட்டார். ஆறு வாரங் களுக்குள் அரசாங்கம் அவரை மறுபடியும் கைது செய்து சிறைத் தண்டனை கொடுத்து விட்டது.

நேருஜீ லக்ஷ்மணபுரி ஜில்லாச் சிறையில் அடைக்கப் பட்டிருந்தார்,

1923 ஜனவரியில் அரசாங்கம் அரசியல் கைதிகள் அனைவரையும் விடுதலை செய்த போது நேருவும் வெளியே வந்தார்.

## அத்தியாயம் 6

ஜவஹர்லால் நேரு மீண்டும் தேசீயப் பணியில் மும்மரமாக ஈடுபட்டார். காங்கிரஸில் செல்வாக்குப் பெற்றவர்கள் நகரசபைகளில் முக்கிய பங்கு பெற வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்ட காலம் அது. ஆகவே நேரு அலகாபாத் முனிசிபல் தலைவர் ஆனார்.

நேருவுக்கு நாட்டில் இருந்த மதிப்பையும். அவருடைய ஆற்றலையும் உணர்ந்த ஆங்கிலேயர் அவர் திறமைகளைப் பயன்படுத்திக் கொள்ள ஆசைப்படுவது போல் காட்டி. திசை திருப்பிவிட அவாவினர். அவர் விரும்பினால் நேருவுக்குக் கல்வி மந்திரி பதவி கிடைக்கும், அதன் மூலம் சமுதாயத்தைச் சீர்திருத்த நல்ல சந்தர்ப்பங்கள் கிட்டும் என்று கூறிச் சில ஆங்கிலேயர்கள் மறைமுக முயற்சிகள் புரிந்தனர். ஆயினும் அவர்களது 'பச்சாப் பலிக்கவில்லை '!

காங்கிரஸில் பிரிவு ஏற்பட்டிருந்தது. தேசபந்து தாசும், மோதிலாலும் சுயராஜ்யக் கட்சியை ஆரம்பித்து சேவை செய்து வந்தனர். நேருவுக்குக் காந்தியின் தலைமையில் நம்பிக்கை இருந்தது. ஆனாலும் அவருடைய திட்டங்களில் சில குறைபாடுகள் உள்ளன என்பதை அவருடைய ஆராய்ச்சி உள்ளம் சுட்டிக்காட்டி வந்தது. காந்திஜீயின் ஆலோசனைகளையோ தெளிவான விளக்கவுரைகளையோ பெறுவதற்கு வாய்ப்பு இல்லாத வகையிலே அவர் சிறையில் அடைபட்டுக் கிடந்தார்.

1923-ம் வருஷம் நம் நேருவுக்கு விசித்திரமானதும் எதிர்பாராததுமான ஓர் அனுபவம் ஏற்பட்டது.

அக் காலத்தில் சீக்கியர் கிளர்ச்சி ஒன்று நடை பெற்று வந்தது. பஞ்சாப், பாட்டியாலா, நாபா சமஸ் தானங்களை ஆண்டு வந்த சீக்கிய மன்னர்களிடையே சொந்தப் போராட்டங்கள் வேறு நடைபெற்றன, அவற்றின் விளைவாக நாபா சமஸ்தான அரசர்பட்டம் இழந்தார். ஆட்சிப் பொறுப்பு இந்திய அரசாங்கத் தினரிடம் வந்து சேர்ந்திருந்தது. பிரிட்டிஷார் நாபா சமஸ்தானத்துக்கு ஒரு அட்மினிஸ்ட்ரேட்டர்' நியமித் தனர்.

அந்த அதிகாரி சீக்கியரின் மதஉரிமையில் குறுக்கிட்டு ஜெய்தோ எனும் இடத்தில் நிகழவிருந்த ஒரு விழாவை நடைபெறாமல் தடுத்துவிட்டார். அதை எதிர்த்துப் போராடவும், விழாவை நடத்தவும் சீக்கியர் கோஷ்டி கோஷ்டியாக ஜெய்தோவுக்குப் போனார்கள். போலீசார் அவர்களைத் தடுத்து நிறுத்தி, மூர்க்கத்தனமாக அடித்துக் கைதுசெய்து, காட்டு வெளிகளுக்குத் தூக்கிச் சென்று ஆங்காங்கே விட்டுவிடுவதை வழக்கமாகக் கொண் டார்கள்.

பத்திரிகைகளில் இவ்விதமான செய்திகள் அடிக்கடி வருவதைக் கண்டார் நேரு. டில்லியில் கூடிய விசேஷக் காங்கிரஸ் முடிவுற்றிருந்த சமயத்தில், மற்றுமோர் சீக்கிய ஜதா ஜெய்தோவுக்குக் கிளம்புகிறது என்று நேரு அறிந்தார். அக் கோஷ்டியுடன் சென்று, என்ன தான் நடக்கிறது என்று நேரடியாக ஆராய விரும்பினார் அவர். "இதனால் பிரமாத நஷ்டம் எதுவும் வந்து விடாது. ஒரே ஒரு நாள் தான் வீணாகும்" என்று நினைத்தார் அவர் ரயில் மூலம் சென்று, தனிப் பாதை வழியாக ஜெய்தோ எல்லை

யை அடைய வேண்டியது; சீக்கிய கோஷ்டி வரும் போது நாபா சமஸ்தான எல்லையில் நின்று அனைத்தையும் கவனிக்க வேண்டும் என்று திட்டமிட்டார்.

நேருவுடன், கித்வானியும், கே.சந்தானமும் சென்ற னர். நாபா சமஸ்தானத்தை அவர்கள் சேர்வதற்கும் சீக் கிய கோஷ்டி அங்குவருவதற்கும் சரியாக இருந்தது. கோஷ்டி முன்னே செல்ல, நேருவும் நண்பர்களும் சற்று விலகியே சென்றார்கள். சமஸ்தானத்தினுள் பிரவேசித் ததும், போலீசார் கோஷ்டியைத் தடுத்து நிறுத்தினர் நேருவிடமும் மற்ற இருவரிடமும் பிரிட்டிஷ் அதிகாரி கையெழுத்திட்ட உத்திரவை ஆளுக்கு ஒன்றாகக் கொடுத் தனர்.

நேரு சமஸ்தானத்துக்குள் பிரவேசிக்கக் கூடாது; எல்லையைத் தாண்டி உள்ளே வந்திருந்தால் உடனடி யாக வெளியேறி விடவேண்டும் என்று அந்த உத்திரவில் கண்டிருந்தது. மற்றவர்களுக்கும் இதே உத்திரவுதான் பிறப்பிக்கப்பட்டிருந்தது.

" நாங்கள் ஜதாவில் கலந்து கொள்ள வரவில்லை. நிகழ்ச்சிகளைக் கண்டு போகவே வந்திருக்கிறோம். நாபா சமஸ்தான விதிகளை மீறும் எண்ணம் எங்களுக்குக் கிடையாது " என்று நேரு எடுத்துச் சொல்லியும், போலீ சார் கேட்கவில்லை.

" நாங்கள் நாபாவினுள் வந்தாயிற்று, உள்ளே வரக் கூடாது என்கிற உத்திரவை இப்பொழுது கொடுப்பதில் அர்த்தமே கிடையாது. மேலும் சட்டென எவ்வாறு நாங்கள் போய்விட முடியும்? காற்றோடு காற்றாகக்

கலந்து விடும் சக்தி எங்களுக்கு இல்லையே!'' என்று நேருவும் அவர் நண்பர்களும் சொன்னார்கள். ஜெய்தோ விலிருந்து கிளம்பும் ரயிலுக்குப் பலமணி நேரம் காத் திருக்க வேண்டும்: அதுவரையில் அங்கேயே தங்கி யிருக்கப் போவதாக அவர்கள் அறிவித்தனர்.

போலிசார் மூவரையும் கைது செய்து 'லாக்கப்' பில் அடைத்தனர். பிறகு சீக்கியரிடம் வழக்கம் போல் தங்கள் கைவரிசைகளைக் காட்டிக் தீர்த்தனர்.

கைது செய்யப்பட்ட மூவரையும் மாலைவரை லாக்கப்பில் வைத்திருந்து, பின்னர் ஸ்டேஷனுக்கு இட்டுச்சென்றனர். சந்தானத்தின் இடதுகையோடு நேருவின் வலது கையைப் பிணைத்து விலங்கிட்டு, அதி லுள்ள சங்கிலியைப் பிடித்து அவர்களை ஜெய்தோவின் வீதிகள் வழியாக அழைத்துச் சென்றார்கள் போலீஸ்காரர் கள், ''நாயைச் சங்கிலியில் கட்டி இழுத்துச் செல்வது போல் இருக்கிறது'' என்ற எண்ணமே நேருவின் மனதில் எழுந்தது. இரவில் ரயிலிலும். நாபா 'லாக்கப்' பிலும் அவர்கள் இங்நிலையிலேயே பொழுது போக்க நேர்ந்தது. மறுநாள் மத்தியானம் நாபா ஜெயிலில் சேர்ப் பிக்கப்பட்ட பிறகுதான் அவர்களைத் தனித்தனியாக்கி னார்கள்.

"ஒருவர் சகாயமில்லாமல் மற்றவர் நகரக்கூட இயலாதநிலை. ஒரு இரவும் பகலில் பாதிநேரமும் இன் னொருவர் கையோடு சேர்த்து விலங்கிட்டுக் கிடக்கிற கசப்பான அனுபவத்தை மறுபடியும் அனுபவிக்கும் ஆசை எனக்கு எழவே எழாது'' என்று நேரு குறிப் பிட்டிருக்கிறார்.

நாபா ஜெயிலில் சுகாதாரக் குறைவான அறையில் அவர்களை அடைத்து வைத்தார்கள். ஈரம்பிடித்த சின்னஞ்சிறு அறை அது. உயரமும் மிகக்குறைவு. தரையில் தான் அவர்கள் படுத்து உறங்கவேண்டும். பாதி ராத்திரியில் பதறி எழவேண்டிய அவசியமும் நேர்ந்து விடுமாம். ஆராய்ந்தால். எலியோ. சுண்டெலியோதான் முகத்தின் மீது ஏறிவிளையாடியிருக்கிறது என்று புரியுமாம்.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு மூவரும் விசாரணைக்குக் கொண்டு போகப்பட்டனர். கல்வி ஞானமே அற்ற ஒருவர் நீதிபதியாக இருந்தாராம். வழக்கு அநேக நாட்களுக்கு நீண்டது. திடீரென்று ஒரு மாற்றமும் பெற்றதாம். வேறொரு இடத்தில் வேறொருவர் முன்னிலையில் சதிக்குற்றத்துக்காக விசாரணை நடைபெற்றதாம். பொய்வழக்கு ஜோடித்து. அதையும் தங்கள் இஷ்டம்போல் வளர்த்து, விசாரணை நாடகம் ஆடிக்கொண்டிருந்தார்கள் சமஸ்தான நிர்வாகிகள்.

நீதியின் பெயரால் நடந்த கேலிக்கூத்து இரண்டு வார காலம் நீடித்த பிறகு, நேருவுக்கும் அவர் நண்பர்களுக்கும், இரண்டு குற்றங்களுக்குமாக இரண்டு அல்லது இரண்டரை வருஷச் சிறைத்தண்டனை விதிக்கப்பட்டது.

நேரு கைதான செய்திமட்டும் தான்சமஸ்தானத்தை விட்டு வெளியே சென்று பரவியிருந்தது. விசாரணை விவரங்களோ பிறவோ பத்திரிகைகளை எட்டவில்லை. சமஸ்தானங்களின் தர்பாரை ஓரளவு உணர்ந்திருந்த மோதிலால் வைஸிராய்க்குத் தந்தி கொடுத்தார். ஜவஹரைக் காண அனுமதி கோரினார். முதலில் அவருக்கு

அனுமதி மறுக்கப்பட்டது. பிறகு கிடைத்தது. நேருவை யும் மற்றவர்களையும் சிறையில் வந்து பார்த்த மோதிலால் துக்கப்பட முடிந்ததே தவிர வேறு எவ்வித உதவியும் செய்ய இயலாது போயிற்று.

விசாரணை முடிந்து தீர்ப்புக் கூறப்பட்டதும் தீர்ப் பின் பிரதிகள் வேண்டுமென்று நேருவும் அவரது சகாக் களும் கோரினர். உரிய முறையில் மனுச்செய்தால் கோரிக்கை கவனிக்கப்படும் என்ற பதில் தான் கிடைத் தது.

அன்று சாயங்காலம் ஜெயில் அதிகாரி அவர்களை அழைத்து, சமஸ்தானத்தை நிர்வகித்து வந்த பிரிட்டிஷ் அதிகாரியின் உத்தரவுகள் இரண்டைக் காட்டினார். தீர்ப்பை அமுல் நடத்தும் செயல் காலவரையறை இன்றி ஒத்தி போடப்பட்டிருக்கிறது என்பது ஒன்று. அவர்கள் நாபா சமஸ்தானத்திலிருந்து வெளியேறிவிட வேண்டும்; விசேஷ அனுமதி இல்லாமல் மறுபடியும் நாபாவினுள் பிரவேசிக்கக் கூடாது என்பது மற்றொரு உத்திரவு.

இவ் இரண்டு உத்தரவுகளின் பிரதிகள் வேண்டு மென்று நேரு கேட்டார். கொடுக்கமறுத்துவிட்டார்கள். போலீசார் மூவரையும் ரயில்வே ஸ்டேஷனுக்கு இட்டுச் சென்று விடுதலை கொடுத்து விட்டார்கள். நேருவுக்கும் நண்பர்களுக்கும் நாபாவில் யாரையும் தெரியாது. மேலும் இரவு கால பந்தோபஸ்தாக நகரின் வாசல்கள் மூடப் பெற்று விட்டன. ஸ்டேஷனில் காத்திருந்த மூவரும் அம் பாலாவுக்கு ஒரு ரயில் வண்டி சீக்கிரம் கிளம்பும் என அறிந்து மகிழ்ந்தனர். அதில் ஏறி அம்பாலா சேர்ந் தார்கள்.

நேரு அம்பாலாவிலிருந்து டில்லி போய், பிறகு அலகாபாத் சேர்ந்தார். அங்கிருந்து, சமஸ்தான அதிகாரிக்கு, தீர்ப்பின் பிரதிகளையும் அவருடைய இரு உத்திரவுகளின் பிரதிகளையும் அனுப்பி வைக்கும்படி, கடிதம் எழுதினார். அந்த பிரிட்டிஷ் அதிகாரி பிரதிகளை அனுப்ப முடியாது என மறுத்து விட்டார். நேரு எவ்வளவோ முயன்றும் பலனில்லை.

இந்த அனுபவங்களின் மூலம், இந்திய சமஸ்தானங்களின் நிர்வாகம் எப்படி இருந்தது, அங்கு நீதி என்ன பாடுபட்டது என்பதை எல்லாம் நேரு நன்ருக அறிந்து கொண்டார்.

## அத்தியாயம் 7.

1923 டிசம்பரில் காங்கிரஸ் காக்கிநாடாவில் கூடியது. மௌலானு முகமதுஅலி தலைவரானர். ஜவஹர் லால் நேருதான் காங்கிரஸின் காரியதரிசி ஆகவேண்டும் என்று அவர் வற்புறுத்தினர். நேரு எவ்வளவோ மறுத்தும் பிரயோசனமில்லை. காரியதரிசிப் பொறுப்பை அவர் ஏற்றுக் கொள்வது தவிர வேறு வழி இல்லாது போயிற்று. அவ் வருஷம் தான் அகில இந்திய ரீதியில் பணியாற்ற ஹிந்துஸ்தானி சேவாதளம் என்கிற தொண்டர் ஸ்தாபனம் நிறுவப்பட்டது. அம் முயற்சியில் நேரு அதிக அக்கறை செலுத்தினர்.

திடீரென்று நாட்டை ஸ்தம்பிக்க வைத்த கவலைச் செய்தி ஒன்று பிறந்தது. சிறையிலிருந்த காந்திஜீகொடிய நோயுற்றுக் கஷ்டப்பட்டார் என்று தெரிந்தது. அவரைச் சிறையிலிருந்து ஆஸ்பத்திரிக்கு மாற்றினர்கள். ஆப்ப

ரேஷன் நடைபெற்றது. எல்லோரும் கவலையோடும் பயத்துடனும் காத்திருந்தனர். ஆபத்து சுமுகமாக நீங்கி விட்டது. காந்தியைத் தரிசிக்கும் ஆவலோடு வெள்ளம் போல் மக்கள் கூட்டம் பூனா நோக்கிச் சென்றனர். நேருவும் தந்தையோடு காந்திஜீயைக் காணச் சென்றார்.

ஆறு வருஷ சிறைத் தண்டனை விதிக்கப்பெற்றிருந்த காந்திஜீ இரண்டு வருஷங்களைத்தான் கடந்திருந்தார். எனினும், மீண்டும் அவரை ஜெயிலுக்குக் கொண்டு செல்ல அரசாங்கம் துணியவில்லை. காந்தி உடல் நிலை தேறுவதற்காக பம்பாய் கடலோரத்திலுள்ள ஜுஹூவில் தங்கியிருந்தார். மோதிலாலும் குடும்பத்துடன் அங்கு சென்று சில வாரங்கள் வசித்தார். பல வருஷங்களுக்குப் பிறகு, மனதுக்கு இசைந்த வகையில், கடலில் நீந்திக் களிக்கவும், மணலில் ஓடி ஆடவும், குதிரை சவாரி செய்யவும் நேருவுக்கு நிறையச் சந்தர்ப்பங்கள் வாய்த்தன.

ஆனால் இத்தகைய ஓய்வு கொண்டாட மட்டுமே நேருவும், மோதிலாலும் அங்கு குடியேற வில்லை. காந்திஜீயுடன் விரிவாகப் பேசி விளக்கம் பெற விரும்பி னார்கள் தந்தையும் மகனும்.

காந்திஜீயின் பலத்தை சுயராஜ்யக் கட்சிக்குச் சம்பாதிக்க முயன்றார் மோதிலால். அவர் வெற்றி காணவில்லை.

நேருவும் ஏமாற்றம் தான் அடைந்தார். அவர் கொண்ட சந்தேகம் எதையும் தெளிவுபடுத்தி விட வில்லை காந்திஜீ. தமது கொள்கைகளிலும் நம்பிக்கைகளி

லும் தவறுகள் உண்டு என அங்கீகரிக்கவும் அவர் தயாராக இல்லை. நீண்ட காலத் திட்டங்கள் வகுக்கவோ, காங்கிரஸின் லட்சியங்களுக்கு எல்லைகட்டிக்காட்டவோ காந்திஜீ முன்வரவுமில்லை. இதனுல் எல்லாம் நேரு அதிருப்தியுடன் தான் திரும்ப நேருந்தது.

1923-ம் வருஷம் பிற் பகுதியில் நேரு முதன்முதலாக நோய்ப் படுக்கையில் விழுந்தார். நாபா சமஸ்தானச் சிறை வாசம் அளித்த பரிசு அது. அவருக்கு டைபாய்டு கண்டு விட்டது. நேரு தனது உடலின் வலிவையும், நோய் நொடி இன்றி வாழும் நிலையையும், மழை வெயில் பனி முதலியவைகளைத் தாங்கிக் கொள்ளும் சக்தியையும் எண்ணிப் பெருமை கொண்டிருந்தார். இளம் பிராயம் முதலே தவருது தேகப் பயிற்சி செய்து வந்தது. தான் வியக்கத் தகுந்த இந்த உடல் நிலையின் அஸ்திவாரம் என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார். ஆகவே, நோயுற்று படுத்தபடுக்கையாகக் கிடந்தது நேருவுக்கு முற்றிலும் புதியதோர் அனுபவமாகவே இருந்தது.

அவருடைய இளமையும் உடலுறுதியும் நோய்க்கு விரைவிலேயே முடிவு கட்டி விட்டன. என்ருலும் அசதியைப் போக்கி, ஆரோக்கியம் பெறுவதற்காக அவர் பல வாரங்கள் படுக்கை வாசியாக வாழ வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அந்த நாட்களில் அவர் அரசியல் பரபரப்புகளிலிருந்து ஒதுங்கியிருந்து சகல பிரச்னைகளைப் பற்றியும் தெளிவாகச் சிந்திக்க முடிந்தது. "இந்த அனுபவம் மனோபாவத்தில் குறிப்பிடத் தகுந்த மாற்றங்களை ஏற்படுத்தின. இன்ன ரகத்தது என விவரிக்கவொண்ணு ஆத்ம அனுபவம் இது" என்று நேரு எழுதியிருக்கிருர்.

அரசியல் வானில் நம்பிக்கை ஊட்டும் ஒளிபரவ வில்லை. ஆனால் கவலை தரும் கார்மேகங்கள் கவிந்து வந்தன. மதத்தையும் அரசியலையும் ஒன்று படுத்தி, குட்டை குழப்பிக்கொண்டிருந்தார்கள். ஜாதி வேற்றுமை பல கிளர்ச்சிகளுக்கு வித்து ஆயிற்று. இந்து முஸ்லிம் கலவரங்கள் நடந்து வந்தன. பிரித்து ஆளும் சூழ்ச்சிக் கலையில் கைதேர்ந்த பிரிட்டிஷார் மறைமுகமாக இவற்றை ஆதரித்துத் தூண்டிவிட்டனர்.

ஜவஹர்லால்நேரு சுவாரஸ்யமற்ற முறையில் பணியாற்றிக் காலம் கழித்தார். அலகாபாத் முனிசிபல் சேர்மனாக அவர் மூன்று வருஷம் நிர்வாகம் நடத்த வேண்டியிருந்தது. ஆனால், இரண்டாவது ஆண்டிலேயே பொறுப்பைத் தட்டிக் கழிக்கும் ஆசை அவருக்கு எழுந்தது. அதற்காக அவர் கடமையில் குறைகள் புக அனுமதித்தாரில்லை. அவரது தலைமையில் விளங்கிய முனிசிபல் நிர்வாகம் பிரிட்டிஷ் சர்க்காரின் பாராட்டுதலைப் பெற்றது. எனினும் பலனுள்ள ஆக்க வேலை எதிலும் ஈடுபட வழியில்லாமல் காலம் பாழாகிக் கொண்டிருக்கிறதே என்ற ஏக்கமே நிலைத்து நின்றது அவர் உள்ளத்தில்.

தனது ஆற்றலுக்கும் செயல் துடிப்புக்கும் முனிசிபல் நிர்வாகம் மிகவும் குறுகிய எல்லை என்பதை உணர்ந்து, நேரு சேர்மன் பதவியை ராஜிநாமாச் செய்ய முயன்றார். அவரிடம் அதிக அன்பு காட்டிய அங்கத்தினர்கள் அனைவரும் முதல் தடவை நேருவைத் தடுத்துத் தங்களிடையே நிறுத்திக் கொண்டார்கள். எனினும் அவரது பதவிக் காலத்தின் இரண்டாவது ஆண்டு இறுதியில், அவர் ராஜிநாமா செய்தே தீர்த்தார்.

அது நடந்தது 1925-ல். அவ் வருஷம். நேருவின் மனைவி நோயுற்று பல மாதங்களாக லக்ஷ்மணபுரி ஆஸ்பத்திரியில் கிடந்தாள். அப்பொழுதும் நேரு காங்கிரஸின் பொதுக் காரியதரிசியாக இருந்ததால், அவர் அலகாபாத்துக்கும், கான்பூருக்கும், லக்ஷ்மணபுரிக்குமிடையே ஓடி அலைந்து சிரமப்பட்டார். கமலாவின் உடற்சிகிச்சைக்காக ஸ்விட்ஸர்லாந்து செல்ல வேண்டியது அவசியம் என்று டாக்டர்கள் சிபார்சு செய்தார்கள்.

அந்த அபிப்பிராயத்தை உற்சாகமாக வரவேற்றார் நேரு. தெளிவான பாதையோ புலனாகவில்லை. அவருடைய உள்ளம் ஒரே குழப்பமயமாக இருந்தது. இந்தியாவிலிருந்து விலகி வெகுதொலைவில் இருந்து பிரச்னைகளைக் கவனித்து ஆராய்ந்தால் அக இருள் நீங்கி ஒளி ரேகை தோன்றலாம்என்றஎண்ணம் அவர் உள்ளத்தில் வளர்ந்து வந்தது. அயல்நாடு செல்வதற்கு இப்போது நல்ல சாக்கு கிடைத்தது என்று மகிழ்ந்தார் நேரு.

ஆகையினால், நேரு 1926-மார்ச் மாதத்தில், தனது மனைவியுடனும் மகளோடும் வேனிஸ் நகருக்குக் கப்பலேறினார்.

## அத்தியாயம் 8.

நேரு, பதிமூன்று வருஷ இடைக் காலத்திற்குப் பிறகு, மீண்டும் ஐரோப்பாவில் அடியெடுத்து வைத்திருந்தார். அந்தக் கால அளவினுள் உலகம் யுத்த பயங்கரத்தையும் ரத்தக் களறியையும் அனுபவித்திருந்தது. நாடுகள் பலவும் பெரிய பெரிய மாறுதல்களைப் பெற்றிருந்தன.

மிஞ்சிப் போனால் அங்கு ஆறு அல்லது ஏழு மாதங்கள் தான் தங்க நேரிடும் என்று நேரு எண்ணினார். ஆனால் அவரும் அவர் குடும்பத்தினரும் இந்தியா திரும்புவதற்குள் ஒரு வருஷம் ஒன்பது மாதங்கள் கழிந்து விட்டன. பெரும் பங்கு காலத்தை அவர்கள் ஜினீவா. ஸ்விட்ஸர்லாந்து. மான்டனா மலையிலுள்ள சுகவாச ஸ்தலம் ஆகிய இடங்களிலேயே கழித்தனர். பிரான்ஸ், ஜெர்மனி, இங்கிலாந்து நாடுகளிலும் சிறிது சுற்றி மகிழ்ந்தார்கள்.

ஐரோப்பாவில் தங்கியிருந்த காலத்தில் நேரு பழைய பயங்கரவாதிகளையும், மாஜி தேசபக்தர்களையும், அரசியல் துறவிகளையும் சந்தித்துப் பேசிப் பழக வாய்ப்புக்கள் கிட்டின. இந்தியப் பிரச்னைகளை தூரத்திலிருந்து கவனித்து ஆராய்ந்தார் நேரு. இந்திய தேசீயத் தலைவர்களிடையே மனவேற்றுமைகளும் கொள்கைப் பிணக்குகளும் ஏற்பட்டு வளர்ந்ததுடன், மதவெறி சில தலைவர்களைப் பற்றிக் கொண்டு ஆட்டி வைத்ததையும் அறிந்து நேரு கவலையுற்றார். 1926-ல் சுவாமி சிரத்தானந்தர் எனும் மாவீரர் படுத்த படுக்கையாகக் கிடந்த போது மதவெறியன் ஒருவனால் கொலை செய்யப்பட்டார் என்ற சேதி அவரைத் திடுக்கிடச் செய்தது. கூர்க்கரின் துப்பாக்கிச் சனியன்களுக்கும் குண்டுகளுக்கும் நேராக மார்பைத் திறந்து காட்டிக் கொண்டு போராடி முன்னேறிய வீரருக்குக் கிடைத்த துர்ப்பாக்கியச் சாவு நேருவின் உள்ளத்தைக் கலக்கியது. இந்து முஸ்லிம் ஒற்றுமையை வலியுறுத்திப் பிரசாரம் செய்து வந்தவருக்கு இதுதானா பரிசு என்று மனம் குமைந்தார் அவர். சுவாமி சிரத்தானந்

தரிடம் நன்மதிப்பும், அவரது ஆற்றலிலும் சேவையிலும் பெருவியப்பும் கொண்டிருந்தார் நேரு.

புருஸ்ஸல்ஸ் நகரில் கூடிய ' அமுக்கப்பட்ட தேசீய வாதிகள் காங்கிர'ஸில் இந்தியாவின் பிரதிநிதியாக நேரு சேர்ந்து கொண்டார். சர்வதேசச் சங்க நிகழ்ச்சிகளிலும் அவர் கலந்ததுண்டு. இவைகளின் மூலம் மேல் நாட்டுத் தொழிலாளவர்க்கத்தினரின் உண்மையான நிலைமை பற்றி அவர் தெளிவாக அறிய முடிந்தது.

1927-ம் வருஷக் கடைசியில் நேரு, தன் குடும்பத்துடன், கொளும்பு வந்து, அங்கிருந்து சென்னைக்கு விஜயம் செய்தார். அவ் வருஷம் காங்கிரஸ் சென்னையில் கூடியது. உடல் நலத்துடனும் உள்ளத்து நிறைவுடனும் இந்தியா திரும்பியிருந்த நேரு, சுதந்திரம் அயல்நாட்டு உறவு, யுத்த பயங்கரம் முதலியன பற்றிய பல தீர்மானங்களை, சென்னைக் காங்கிரஸின் முன் கொண்டு வந்தார். அவருடைய உற்சாகத்தை எதிர்த்து நிற்க விரும்பாத காங்கிரஸ் அவரது தீர்மானங்களை ஏகமனதாக நிறைவேற்றி வைத்ததாம்.

காங்கிரஸ் தலைவர் வற்புறுத்தியதாலும், தான் கொண்டு வந்த தீர்மானங்களை நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டிய முக்கியத்தை எண்ணியும், நேரு மீண்டும் காங்கிரஸின் காரியதரிசிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள நேரிட்டது. அதன் பிறகு பல வருஷங்கள் வரை பொறுப்பான அந்தப் பதவி அவரை விட்டு விலக மறுத்து விட்டது! நேருவின் திறமையான பணியையும் உழைப்பின் ஊக்கத்தையும் கண்டு தலைவர்கள் அவ

ரையே காரியதரிசியாகக் கொள்ள அவாவினர். வருஷத்திற்கொரு முறை தலைவர் மாற்றம் ஏற்படும் வழக்கம் இருந்தது. ஆனாலும் நேருஜீ தான் காரியதரிசி என்ற நியதி நீடித்து விட்டது.

நாட்டின் அரசியல் களத்திலும், நேருவின் வாழ்விலும் 1928 முக்கியச் சம்பவங்களுக்கு இடமளித்த வருஷமாகத் தான் விளங்கியது. தொழிலாளர்கள், விவசாயிகள், மத்தியதர வகுப்பு இளைஞர்கள், படித்தவர்கள் ஆகிய பலவர்க்கத்தினரும் புது விழிப்புப் பெற்றிருந்தார்கள். தொழிற் சங்கங்கள் பல மடைந்து வந்தன. குடியானவர்கள் பல இடங்களில் கிளர்ச்சி செய்து வந்தார்கள். வல்லபாய் பட்டேலின் தலைமையில் நிகழ்ந்த 'பர்டோலி சத்தியாக்கிரகம்' மகத்தான வெற்றி பெற்றது. இந்தியாவுக்கு வந்திருந்த சைமன் கமிஷனை பகிஷ்கரிக்கும் திட்டம் அமுலுக்கு வந்தது. அதனால் தடியடி தர்பார் தாண்டவமிட்டது.

'சைமனே, திரும்பிப்போ!' என்று கூறி, கறுப்புக் கொடி காட்டி நின்ற படை ஒன்றின் தலைவராய் விளங்கிய லாலாலஜபதிராய் தடியடி ஏற்றுப் படுகாய முற்றார். சில தினங்களிலேயே மரணமும் அடைந்தார்.

லஜபதிராயின் அநியாயச் சாவு இந்தியமக்களின் ஆத்திரத்தைக் கிளப்பியது. அவர் பெற்ற அவமானமும் தாக்குதலும் இந்திய நாட்டின் அவமானமாக மதிக்கப்பட்டது. நாட்டின் மானத்தைக் காக்க ஆவேசத்துடன் எழுந்த இளைஞர்கள் பலர் அந்தக் சந்தர்ப்பத்தில் பிரமாதமான கவனிப்பையும், மக்களின் போற்றுதலையும் பெற்று

விடுவதும் சாத்தியமாயிற்று. குறுகிய காலத்தில் அப்படி அழியாப் புகழைப் பெற்ற ஒரு சிலரில் பகத்சிங் மிக முக்கியமானவர்.

லஜபதிராயின் மரணத்துக்குப் பின்னர், சைமன் கமிஷனை எதிர்க்கும் போராட்டம் வலுப்பெற்றது. ஊர்வலங்களும், கொடி காட்டுதலும் கோஷமிடுதலும் அதிகரித்தன. அரசாங்கம் குதிரைப் படையை ஏவி மனிதக் கூட்டத்தை மிதித்துத் துவைக்க உத்திரவிட்டது. தடிகளைத் தாறுமாருகப் பிரயோகிக்க அனுமதி அளித்தது. லக்ஷ்மணபுரியில் சைமனை எதிர்த்து ஊர்வலம் வந்த போது, ஜவஹர்லால் நேருவும் வேறு சில தலைவர்களும் பலமாகத் தாக்கப்பட்டார்கள். நேரு தனது அரசியல் வாழ்வில் பெற்ற முதல் தடியடி அனுபவம் அதுதான்.

## அத்தியாயம் 9

1929-ம் வருஷம் லாகூரில் நடைபெற்ற காங்கிரசுக்கு நேரு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். எதிர்பாராமல் வந்து சேர்ந்த பொறுப்பு அது.

அவ் வருஷம் காந்திஜீயைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க அனைவரும் முடிவு செய்துவிட்டனர். காந்திஜீ பல வருஷங்களாக அரசியலில் நேரடியாகப் பங்கு பெருமல் விலகியே வாழ்ந்தார். கதர் இயக்கம் சம்பந்தமாக இந்தியாவின் பரப்பு முழுவதையும் தமது யாத்திரையினல் அளந்தார். 'தரித்திர நாராயணர்களுக்குத் தொண்டு' புரிவதே தனது லட்சியம் என்று கதர்ப் பிரச்சாரம் செய்து, நிதி வசூலித்துச் சுற்றிக் கொண்டிருந்த காந்திஜீ

காங்கிரஸ் தலைமையை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார்.

அவருடைய மறுப்பு கடைசி நேரத்தில் தான் கமிட்டிக்குத் தெரிந்தது. ஜவஹரைத் தலைவராக்கும்படி காந்திஜீ சிபாரிசு செய்துவிட்டார். காரியக் கமிட்டியினர் தர்ம சங்கடமான நிலையில் சிக்கி, வேறு வழி இல்லை என்ற தன்மையில், நேருவைத் தலைவராகத் தேர்ந்தனர்.

இது மகத்தான கௌரவம் என்பதை ஜவஹர் உணர்ந்திருந்தாலும், தனது மதிப்பு பாதிக்கப்பட்டு விட்டதாக எண்ணிப் புழுங்கினார் நேரு. அவர் நேர் வழியாக அந்த உரிய கௌரவத்தைப் பெறவில்லை; குறுக்கு வழியாக அங்கு சேர்க்கப்பட்டுவிட்டார் என்ற வேதனை பொங்கியது. 'உங்கள் கௌரவமும் வேண்டாம், பதவியும் வேண்டாம்' என்று திருப்பிக் கொடுத்துவிடத் துடித்தார் அவர். நல்லகாலமாக அவர் அப்படி எதுவும் செய்துவிடவில்லை.

அவ்வருஷம் ஜவஹர்லால் நேரு காங்கிரஸ் தலைவராக வந்ததில் குறிப்பிடத் தகுந்த விசேஷ அம்சம் ஒன்று பொருந்தியிருந்தது. முந்திய வருஷத்திய காங்கிரஸ் தலைவர் மோதிலால் நேரு ஆவர். ஆகவே தந்தைக்குப் பிறகு மகன் தலைமைப் பொறுப்புக்கு வந்தது விசேஷம்தானே. இதை எண்ணி வியக்க இந்நாட்டினர் தவறிவிடவில்லை.

இதற்கு முன்னரே ஜவஹர்லால் நாட்டின் வீர நாயகராக ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தார். 'இந்தியாவின் இணையில்லா வைரம்' என்றும், 'பாரத பூஷணம்'

'தியாக மூர்த்தி' என்றும் மனமாற, வாயாற அழைத்து மகிழ்ந்தார்கள் மக்கள். எங்கு சென்றாலும் நேரு ஜனங்களின் வீர வணக்கத்துக்கு இலக்கானார். சாதாரண ஜனங்களும் அவரைப் போற்றினார்கள். படித்தவர்களும் பட்டதாரிகளும் அவரைப் போற்றினார்கள். எதிரிகள் கூட அவரைப் பாராட்டிப் புகழ்ந்து வந்தார்கள். நேரு காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு அவருடைய மதிப்பு மேலும் அதிகமாக உயர்ந்தது.

நேருவையும் அவர் தந்தையாரையும் பற்றிய அளப்புகள் பல சிருஷ்டியாயின. எங்கும் பரவி நிலைத்து வளர்ந்தன. அவற்றிலே ஒன்று "மோதிலால் நேரு—ஜவஹர்லால் நேரு இருவரும் தங்கள் உடைகளை பாரிஸ் நகரில் உள்ள லாண்டரி எதற்கோ வாரா வாரம் சலவைக்கு அனுப்புகிறார்கள்; அங்கு அருமையாக வெளுக்கப்பெற்று அவை வருகின்றன" என்பதாம்.

இவ்விஷயமாக நேரு சுய சரிதையில் எழுதி உள்ளது மிகவும் சுவையாக இருக்கிறது. "இச் செய்தியைக் கண்டித்து நாங்கள் மறுப்புரை கூறி வந்தும் பலனில்லை. இந்தக் கதை உயிருடன் உலவுகிறது. இதைப் போன்ற வீண் பிரமையும் அபத்தமுமான எண்ணத்தை என்னால் கற்பனை செய்யக் கூட இயலவில்லை. இவ்வித வீண் ஆடம்பரத்தில் ஈடுபடக்கூடிய மடத்தனம் எவனாவது பெற்றிருப்பானாகில், முட்டாள் தனத்துக்குரிய முதல் பரிசு பெறுவதற்கு அவனே அருகதை உள்ளவன் என்று தான் நான் நினைப்பேன்" என்று கூறுகிறார் நேரு.

இதைப் போலவே நிலைபெற்றுவிட்ட மற்றொரு கதையும் உண்டு. "கேம்பிரிட்ஜில் நேரு கல்வி கற்று

வந்த போது, அந்நாளைய வேல்ஸ் இளவரசராகிய எட்டாவது எட்வர்டும் சகமாணவராக இருந்தார். 1921-ல் இளவரசர் இந்தியாவுக்கு விஜயம் செய்த சமயத்தில் நேருவைச் சந்திக்கப் பெரிதும் ஆசை கொண்டார்; ஜவஹர்லால் ஜெயிலில் அடைபட்டிருந்ததால் சந்திப்பு நடைபெறவில்லை" என்கிற விஷயம்தான் அது.

அதுவும் பொய் தான் என்று நேரு குறிப்பிட்டிருக்கிறார். வேல்ஸ் இளவரசருடன் நேரு கல்லூரியில் படிக்கவில்லை, அதுமட்டுமன்று. "அவரை நான் ஒரு முறை கூடச் சந்தித்ததுமில்லை; அவருடன் பேசிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிட்டியதுமில்லை" என்று நேரு எழுதியிருக்கிறார்.

மிக உயர்ந்தவர்கள், பெரியவர்கள், மகாத்மாக்கள் என்று கருதப்படுகிறவர்களைக் குறித்து வதந்திகளையும் வீண்கதைகளையும் அளப்புகளையும் பரப்பி விடுவதிலே ஜனங்கள் தனிரகமான மகிழ்ச்சி அடைகிறார்கள். இது உலக நியதிகளில் ஒன்றாகி விட்டது!

லாகூர் காங்கிரஸ் தீர்மானித்தபடி, 1930-ம் வருஷம் ஜனவரி மாதம் 26-ம் தேதி 'சுதந்திர தினம்' ஆக நாடு முழுவதும் கொண்டாடப்பட்டது. 'சுதந்திர தினப் பிரதிக்ஞை' எடுத்துக் கொண்டார்கள். அதைத் தொடர்ந்து ஒத்துழையாமை இயக்கத்தை நடத்தத் திட்டமிட்டார் காந்திஜீ. உப்பு வரியை எதிர்த்து சத்தியாக்கிரகம் செய்ய வேண்டும் என்று காந்திஜீ அறிவித்ததும், பலருக்கு அது சின்ன விஷயமாகத் தோன்றியது நேரு கூட அப்படித்தான் எண்ணினார்.

1930 ஏப்ரல் ஆறும் நாள் காந்திஜீ தடியேந்தி தண்டி யாத்திரை செய்து, உப்பு சத்தியாக்கிரகத்தைத் தொடங்கி வைத்தார். அச் செயலும், நாடு முழுவதும் பரவிய சத்தியாக்கிரக நெருப்பும். விளைவுகளும் சரித்திரப் பிரசித்தமானவை. மக்களின் மனப்பான்மையும், நாட்டின் நாடியையும், கணிப்பதிலே காந்திஜீ எவ்வளவு வல்லமை பெற்றிருந்தார் என்பதை அவை நிரூபித்து விட்டன. ஜவுளிக்கடை மறியல், உப்பு சத்தியாக்கிரகம் முதலியவைகளில் ஆண்கள் மட்டுமல்ல, பெண்களும் பெருவாரியாகக் கலந்து கொண்டார்கள்.

ஊர்வலம், தடியடி, மறியல், துப்பாக்கிப் பிரயோகம், தலைவர்கள் கைது—இவை எல்லாம் முடிவற்று நிகழும் அரங்கமாக மாறிவிட்டது நாடு. தியாக உணர்வும், சேவா ஊக்கமும் வளர்ந்து ஓங்கின.

இவ் வருஷத்தில் தான் மோதிலால் நேரு அலகாபாத்தில் உள்ள தனது மாளிகையை நாட்டின் பொதுவுடைமையாக்கி, காங்கிரஸிடம் ஒப்புவித்துவிட்டார். அது 'சுயராஜ்ய பவனம்' என்று பெயர் பெற்றது.

உப்பு சத்தியாக்கிரகம் சம்பந்தமாக நேரு கைது செய்யப்பட்டார். அவருக்கு ஆறு மாத சிறைத்தண்டனை கிடைத்தது.

அவருடைய தந்தையும், தாயும், சகோதரிகளும். மனைவியும் மறியல்களில் உற்சாகமாகக் கலந்து தொண்டாற்றினர்கள். செல்வச் சூழ் நிலையில் சுகமாக வாழ்ந்த பெண்கள் வெயிலிலும் வெளியிலும் அலைந்து திரிந்து

தீவிரமாகப் பணி புரிந்தது மோதிலாலுக்கே ஆச்சர்யம் அளித்தது. அவர் சிறைவாசம் ஏற்று மகனைச் சந்தித்துத் தனது வியப்பைச் சொல்லத் தவறினாரில்லை. தந்தைமூலம் விஷயங்களை அறிந்த நேரு அதிசயித்தார்; பெருமையும் கொண்டார்.

அதன் பிறகு நேருவின் வாழ்க்கை, வெளி உலகில் சில தினங்கள் என்றால் சிறையில் பல மாதங்கள் என்ற கணக்கிலே தான் விளங்கியது. சர்க்கார் அவரை விடுதலை செய்யும். அவர் பின்னாலேயே வேட்டை நாய்களைப் போல் ஸி. ஐ. டி. களை ஏவி விடும். ஏதாவது ஒரு காரணம்காட்டி மறுபடியும் ஜெயிலுக்கு அனுப்பிவிடும். இதுவே வழக்கமாகி விட்டது.

தன் கணவரைப்போல் தானும் சிறையினுள் போக வேண்டும் என்ற ஆசை கமலா நேருவுக்கும் இருந்தது. அவரது விருப்பம் நிறைவேறக் கால தாமதம் ஏற்பட்டது. ஆங்கில ஆட்சியினர் பெண் அரசியல் வாதிகளைக் கைது செய்யத் தயங்கினர் முதலில். பிறகு வேறு வழி இல்லை எனக் கண்டதும் வனிதாமணிகளையும் ஜெயிலுக்குள் அடைத்தனர். 1931 ஜனவரி முதல் தேதியன்று புது வருஷப் பரிசாக அரசாங்கம் கமலாநேருவுக்கு சிறை தண்டனையை அளித்தது. அதனால் அவர் மிகுந்த மகிழ்வடைய முடிந்தது.

சிறையிலிருந்த போதே மோதிலால் நேரு நோயுற்றார். அவர் விடுதலை அடைந்த பிறகும் நிலைமை தெளியவில்லை. நோய் வளர்ந்து முற்றி, அவரைப் படுக்கையில் வீழ்த்திவிட்டது. அவரைக்காண அனுமதித்து நேருவை

யும் கமலாவையும் இதர உறவினர்களேயும் சர்க்கார் விடுதலே செய்தது. காந்திஜியும் மோதிலால் நேருவைக் காண வந்திருந்தார். காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அலு வல்களும் நடைபெற்றுக் கொண்டிருந்தன. முக்கிய மான பிரச்னே ஒன்றை அவர்கள் அவசர அவசியமாக முடிவுகட்ட வேண்டியிருந்தது.

"நான் சீக்கிரமே போய்விடுவேன். சுயராஜ்யத்தைக் கண்டு அனுபவிக்க நான் இங்கு இரேன். ஆனலும் உங்களுக்கு நிச்சய வெற்றி உண்டு என்பதை நான் அறி கிறேன்" என்று மோதிலால் காந்திஜீயிடம் சொன்னர். காந்திஜீ மோதிலாலின் அருகிலேயே இருந்தார். 1931 பிப்ரவரி ஆரும் தேதி ஜவஹரின் தந்தை காலமானர்.

மக்களும் தலேவர்களும் பிறரும் அவரிடம் கொண் டிருந்த மதிப்பையும், தன்னிடம் காட்டும் அன்பையும் நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்து குவிந்த அனுதா பச் செய்திகளின் மூலம் நேரு உணர்ந்தார். தந்தை மரண மடைந்த அன்று நேரு திக்பிரமை உற்றதுபோலிருந்தார். பிறகு பல வாரங்கள் வரையிலும் "தந்தை போய்விட் டார்" என்ற உண்மையை அவர் புரிந்து கொள்ளவே சிரமப்பட்டார். அவர் தன்னுடனேயே இருக்கிருர் என்ற நினேப்பே அவருக்கு இருந்ததாம். இதைப் பற்றிய ரசமான சம்பவம் ஒன்று குறிப்பிடத் தக்கது.

தந்தை இறந்த மூன்று மாதங்களுக்குப் பிறகு நேரு குடும்பத்துடன். ஓய்வுக்காக இலங்கை சென்று நுவார எலியாவில் தங்கியிருந்தார். அழகு சூழ்ந்த அந்த இடம் அவருக்குப் பிடித்திருந்தது. தந்தை மனசுக்கு இது

உகந்திருக்கும் என்று எண்ணினர் அவர். தந்தையையும் ஏன் அங்கே வரவழைக்கக் கூடாது என்று கேட்டது நேருவின் மனம். அவர் மிகவும் களைத்துப்போய் விட்டார்; சிறிது நாள் ஓய்வு அவருக்கு நலம் பயக்கும் என்று நினைத்து, அலகாபாத்துக்கு மோதிலால் நேரு விலாசத்திற்குத் தந்தி கொடுக்கவும் தயாராகிவிட்டார் அருமைப் புதல்வர். பிறகு சமாளித்துக் கொண்டார்.

நேரு அலகாபாத்துக்குத் திரும்பியவுடன் அதிசயமான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. தபாலில் ஒரு கடிதம் வந்தது. மோதிலால் நேரு கைப்பட விலாசம் எழுதிய கடிதம் அது. எங்கெங்கோ சுற்றி எத்தனையோ தபால் முத்திரைகள் ஏற்று வந்திருந்தது அது. மிகுந்த ஆச்சரியத்துடன் நேரு கவரைப் பிரித்துக் கடிதத்தை எடுத்து வாசித்தார். அது அவருடைய தந்தை அவருக்கு எழுதிய கடிதம் தான். ஆனல், 1926-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 28-ம் தேதி எழுதப்பட்ட கடிதம். அது விலாசதாரை வந்து சேர்வதற்கு ஐந்தரை ஆண்டுகள் பிடித்தது! 1931-ம் வருஷக் கடைசியில் தான் நேருவிடம் சேர்ந்தது அக் கடிதம்.

1926-ம் வருஷம் கமலாநேருவின் சிகிச்சைக்காக நேரு ஐரோப்பாவுக்குக் கப்பலேறிய சமயத்தில், அலகாபாத்தி லிருந்து மோதிலால் அக்கடிதத்தை அனுப்பியிருந்தார். அவர்கள் பிரயாணம் செய்த 'இட்டாலியன் லாயிட்' எனும் கப்பலின் மேற்பார்வை விலாசமிட்டு பம்பாய்க்கு அனுப்பப் பெற்ற கடிதம் அது. எப்படியோ அது உரிய காலத்தில் கிடைக்கத் தவறி விட்டது. பிறகு அக்கடிதம் பலப்பல இடங்களுக்கு விஜயம் செய்திருந்

தது பல ஆபீஸ்களின் அலமாரி மூலைகளிலும் துயில் பயின்று காலம் கழித்திருப்பதும் சாத்தியமே. முடிவில், உற்சாகி எவரோ நேருவின் சரியான விலாசத்திற்கு அதை அனுப்பிவிட்டார். அக் கடிதத்தின் மற்றொரு விசேஷத் தன்மை என்னவென்றால், தந்தை மகனுக்கு எழுதிய பிரிவுபசாரக் கடிதமாக இருந்தது அது. அதிசயிக்க வேண்டிய விஷயம் தான்; இல்லையா ?

## *அத்தியாயம்-10*

காலம் இந்திய சரித்திரத்தை மாற்றி அமைத்துக் கொண்டிருந்தது. இந்தியாவின் சரிதை புதுவிதமாக அமைவதற்குக் காந்திஜீ துணைபுரிந்து வந்தார்.

காந்தி பிரிட்டிஷாருக்கு மட்டும் தான் பெரும் பிரச்னையாகவும் புதிராகவும் விளங்கினர் என்றில்லை. அவருடைய சகாக்களுக்கும், காங்கிரஸ் கட்சியினருக்கும் கூட அவர் அவ்விதமே விளங்கினர். நேருவும் அவரைப் பூரணமாகப் புரிந்து கொள்ள முடியவில்லை.

காந்திஜீயுடன் சமாதான ஒப்பந்தம் பேசினர்கள் பிரிட்டிஷார். காங்கிரஸைக் குறை கூறினர்கள், காங்கிரஸின் சர்வாதிகாரப் பண்பு புகுந்து விட்டதாகக் குற்றம் சாட்டி, ஜனநாயக மந்திரத்தை உச்சரித்த வாறே எதேச்சாதிகார ஆட்சி புரிந்து வந்தார்கள்.

வைஸ்ராய்கள் வந்தார்கள்; போனர்கள். ஆயினும் பிரிட்டிஷாரின் போக்கிலே மாற்றம் இல்லை.

காந்திஜீ இங்கிலாந்து சென்றார். வட்ட மேஜை மகாநாடு நடந்தது. காந்திஜீ பல மாதங்களுக்குப் பிறகு இங்

தியா திரும்பினார். பிரிட்டிஷ் ஆட்சியினர் தங்கள் வாக்கைக் காப்பாற்றத் தயாராக இல்லை என்பதைக் கண்டார்.

வட்டமேஜை மகாநாடுகள் கூடிக்கூடிக் கலைந்தன. அரசியல் வாதிகள் இந்தியாவில் சிறை அனுபவம் பெற்றுக் கொண்டுதான் இருந்தார்கள்.

ஆண்டு தோறும் காங்கிரஸ் கூடியது. தீர்மானங்களை நிறைவேற்றியது. தலைவர்கள் மக்களின் போற்றுதலைப் பெற்றார்கள். ஜெயிலிலிருந்து திரும்பி வந்தவர்கள் மாலைமரியாதை விழா வைபவங்களை எல்லாம் சிறப்புற ஏற்றனர்.

நேருஜீ தென்னிந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்தார். இந்தியாவின் முக்கிய நகரங்களில் பிரசாரம் புரிந்தார். மீண்டும் சிறை புகுந்தார். அது 1932-ல் நடந்தது.

1932 விசேஷ நிகழ்ச்சிகளை வளர்த்து விட்டது. வரிகொடா இயக்கங்களும், சட்ட எதிர்ப்புகளும் தோன்றின. சர்க்கார் ஜனங்களின் வீடுகளையும் இதர உடைமைகளையும் பறிமுதல் செய்யத் துணிந்தனர். காங்கிரஸ் கொடி பறப்பதைத் தடுத்தனர். தடை உத்திரவுகளை வீசினர். ஜெயிலின் கதவுகள் திறந்து அரசியல் வாதிகளை விழுங்கின. இந்தியாவில் போலீஸ் ராஜ்யம்' தான் நிலவியது. ஜெயிலில் சவுக்கடி கொடுப்பது சகஜமான தண்டனையாயிற்று.

அரசியலாரின் அட்டூழியங்களை எதிர்த்துப் பலர் உண்ணாவிரதம் இருப்பதும் இயல்பாயிற்று. பல வீனங்

களைக் கண்டு சோர்வு ஏற்பட்டது தலைவர்களுக்கு. வெற்றிகளை எண்ணிப் பெருமிதமும் உடனடியாகவே உண்டாயிற்று. உலக நிலைமை படுமோசமாய், பயங்கர மாய், போய்க் கொண்டிருந்தது.

ஜெயிலில் பலரக அனுபவங்களைப் பெற்று வந்தார் நேரு. படிக்கவும், எழுதவும், சிந்திக்கவும் அவருக்கு நிறையநிறைய வாய்ப்புக் கிட்டியது. 'தந்தை மக்களுக்கு எழுதிய கடிதங்கள்' என்று பெயர் பெற்ற, சரித்திரத் தொடர்புள்ள, விஷயங்களை நேரு இந்தச் சந்தர்ப்பத்தில் தான் எழுதினார்,

1933 ஆகஸ்டு 30-ம் தேதி—ஒன்றரை வருஷ காலத்திற்கு அதிகமாகவே ஜெயில் அனுபவம் பெற்ற பின்னர்—நேரு விடுதலை அடைந்தார். அரசியல் உலகம் அமைதியுற்றிருந்ததாக உணர்ந்தார். பெருஞ்செயலில் ஈடுபட்டுக் களைத்த சோர்வு அது.

நேரு தீவிரமாகச் செயல் புரிந்து மறுபடியும் ஜெயி லுக்குள் செல்ல வேண்டும் என்று ஆசைப்படவில்லை. கொஞ்ச காலம் வெளியிலிருந்து, குடும்ப விவகாரங்களைக் கவனிக்க விரும்பினார். எனினும் எங்காவது முக்கிய ஊர்களுக்குப் போக நேரிட்டால் அங்கெல்லாம் பொதுக் கூட்டங்களில் பேச வேண்டிய அவசியம் ஏற்படத்தான் செய்தது. சில முக்கிய நிகழ்ச்சிகளில் பங்கு பெறவும் நேரிட்டது. அவ்வப்போது அரசாங்கம் யார் யாரையோ ஜெயிலுக்குள் தள்ளிக் கொண்டுதான் இருந்தது.

1934 ஜனவரி 15-ம் தேதி பீகாரில் கொடிய பூகம் பம் கோர நடனம் புரிந்தது. அதனால் பாதிக்கப் பெற்ற

மக்களுக்கு உதவி புரிவதில் நேருவும் ஆர்வம் காட்டினர். பீகாரில் பல இடங்களிலும் திரிந்து. கடுமையாக உழைத்து அலுத்துப் போய் அலகாபாத் வந்து சேர்ந்தார் நேரு. பன்னிரண்டு மணி நேரத் தூக்கம் தூங்கினர். அவ்வளவு களைப்பு.

மறுநாள் மத்தியானம் அவருக்கு வாரண்டு வந்து சேர்ந்தது. சரியாக ஐந்து மாதங்களும் பதின்மூன்று நாட்களும்தான் அவர் வெளியே வாழ்ந்தார். மறுபடியும் அரசாங்கம் அவரை ஜெயிலின் அதிதியாக மாற்றிவிட்டது. இம்முறை அவர் கல்கத்தாவைச் சேர்ந்த அலிப்பூர் ஜெயிலில் அடைத்து வைக்கப்பட்டார். சில மாதங்களுக்குப் பிறகு பழைய டேராடூன் சிறையில் சேர்த்தார்கள். அவ்வருஷம் ஆகஸ்டில், பதினேரு தின விடுதலை நேருவுக்குக் கிடைத்தது. நோயினால் அவதியுற்ற கமலாவைக் காண்பதற்காகத் தான் அந்த இடைக்கால விடுதலை. பிறகு நேரு நயினி ஜெயிலில் அடைக்கப்பட்டார். அதன் பின் அவரை அல்மோரா ஜெயிலில் கொண்டு சேர்த்தனர். அங்குதான் நேரு தனது சுய சரிதையை எழுதினர்.

கொடிய குவெட்டா பூகம்பம் 1935-ம் வருஷம் தோன்றி எவ்வளவோ பாதகம் விளைவித்தது. காங்கிரஸ் தலைவர்கள் எவரையும் அங்கு சென்று மக்களுக்கு உதவி செய்ய அரசாங்கம் அனுமதிக்கவில்லை ; காந்திஜீக்குக் கூட தடையுத்தரவு இருந்தது ; குவெட்டா பற்றி எழுதிய பல பத்திரிகைகளின் ஜாமீன் தொகை பறிமுதல் செய்யப்பட்டது. இவ்விஷயங்களை எல்லாம் அறிந்து நேரு பெரிதும் வருந்தினர்.

எங்கும் ராணுவ தர்பார்—போலீஸ் நோக்கு—தான் நீடித்து வந்தது.

அந்த வருஷத்தில் கமலா நேருவின் உடல் நிலை மிகவும் மோசமாகிவிட்டதால், அவரை ஐரோப்பாவுக்கு அழைத்துச் செல்ல வேண்டியது அவசியமாயிற்று. அதை உத்தேசித்து அரசாங்கம் ஜவஹரை செப்டம்பர் 4-ல் அல்மோராவிலிருந்து வெளியே அனுப்பியது. அப்பொழுது அவருடைய தண்டனை காலத்தில் ஐந்தரை மாதங்கள் பாக்கி கிடந்தன.

நேரு ஜெர்மனியில் நோயாய் கிடந்த மனைவியைக் காண விமானம் மூலம் பறந்து போனார்.

## அத்தியாயம் 11

1936 பிப்ரவரி 28-ம் தேதி கமலாநேரு மரணமடைந்தார். மனைவி காலமாவதற்குச் சற்று நேரத்திற்கு முன்புதான், நேரு இரண்டாவது முறையாக அகில இந்தியக் காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்ற செய்தி அவருக்குக் கிடைத்தது. சில தினங்களிலேயே அவர் விமானம் மூலம் இந்தியா திரும்பினார்.

திரும்புகிற வழியில் அவருக்கு அதி விசேஷமான சம்பவம் ஒன்று குறுக்கிட்டது. அக் காலத்திலே, உலகத்துக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்து கொண்டிருந்த இத்தாலிய சர்வாதிகாரி பெனிட்டோ முஸோலினி நேருவைச் சந்தித்துப் பேச ஆசை கொண்டிருந்தார். கடிதம் மூலம் வேண்டுகோள் விடுத்திருந்தார் அவர். ஆனால் நேரு அவரைக் கண்டு பேச விரும்பவில்லை. தன்னைச்

சந்தித்துச் செல்கிற இந்தியத் தலைவர்களின் பெயரைத் தனக்குப் பிரசார பலமாக 'பாரிஸ்ட் ஜடாமுனி' உபயோகித்துக் கொள்வதை நேரு அறிந்திருந்தார். தனது பெயரும் அவ்விதம் பயன்படக் கூடாது என்று அவர் கருதினார். ஆகவே மறுத்து வந்தார்.

என்றாலும், இந்தியாவுக்குத் திரும்புகிற பாதையில் நேரு ரோம் நகரில் ஒருநாள் தாமதிக்க நேர்ந்தது அன்று மாலையில் சந்தித்துப் பேச நேரம் குறித்திருப்பதாக முஸோலினி உயர்தர உத்தியோகஸ்தர் மூலம் அழைப்பு அனுப்பினார். நேருவுக்கும் அந்த அதிகாரிக்கும் ஒரு மணி நேரத்துக்கு அதிகமாகவே விவாதம் நடந்தது. நேருவின் சமாதானங்களை அவர் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. எனினும், பேட்டிக்காகக் குறிக்கப்பட்ட நேரம் கடந்து போகிற வரையில், ஜவஹர்லால் அந்த அதிகாரியுடன் பேசிக் காலக் கொலை செய்து சர்வாதிகாரியைச் சந்திக்காமலே விமானம் ஏறிவிட்டார்.

உலகத்தில் யுத்தமேகம் கனத்துத் தொங்கியது. ஐரோப்பாவில் எரிமலை உள்ளூறக் குமைந்து கொதித்துக் கொண்டிருந்தது. அபிஸீனிய யுத்தம், ஸ்பானிஷ் கலகம். சீனச் சண்டை, பாலஸ்தீனக் குழப்பம் போன்ற விவகாரங்கள் மகாயுத்தத்துககுத் தளம் அமைத்துக் கொண்டிருந்தன.

இந்தியா திரும்பிய நேரு காங்கிரசின் கவனத்தை சர்வதேச திருஷ்டியில் திருப்பினார். துயருற்ற நாடுகளுக்கு அனுதாபங்களும் சிறு சிறு உதவிகளும் அனுப்ப ஏற்பாடு செய்தார்.

பிரிட்டிஷார் தங்கள் நலன்களைப் பாதிக்காத வகை யில் அரசியல் பேரம் செய்து வந்தனர். புதிய சமஷ்டி, மாகாண சுயாட்சி என்றெல்லாம் திட்டங்கள் வகுத்துக் காட்டினர். காங்கிரஸ் அவற்றை முழுவதும் அங்கீ கரிக்கா விட்டாலும், மாகாண சுயாட்சி அடிப்படையில் தேர்தலில் கலந்து கொள்ளத் துணிந்தது.

நாடு பூராவும் தேர்தல் ஜுரம் பரவியது. உற்சாக மும் பரபரப்பும், பொங்கி எழுந்தன. நேரு தேர்தலுக்கு நிற்கவில்லை, ஆயினும் சூறாவளிச் சுற்று பிரயாணம் செய்து காங்கிரசுக்கு செல்வாக்குத் தேடினார். தேர்தல் பிரச்சார சரிதையிலேயே அவ்வருஷம் நேரு பெரிய தொரு 'ரிகார்டு ஸ்தாபித்து விட்டார் என்றே சொல்ல வேண்டும்.

நான்கு மாத காலத்தில் நேரு சுமார் ஐம்பதினாயிரம் மைல் பிரயாணம் செய்தார். சுற்றுப் பிரயாணத்திற்காக அவர் உபயோகிக்காத வாகனம் எதுவுமில்லை. ஏரோப் ளேன், ரயில் வண்டி, மோட்டார், லாரி, பலரகமான குதிரை வண்டிகள், மாட்டு வண்டி, பைஸைக்கிள், யானை, ஒட்டகை, குதிரை. ஸ்டீமர், தோணி, சிறுபடகு எல்லாம் அவருக்கு உதவின. சரியான போக்குவரத்து வசதியற்ற தூரதூர ஊர்களுக்கெல்லாம் அவர் போக நேர்ந்தது. அப்போது அவர் நடந்து திரிய/ அஞ்ச வில்லை.

தினம் தினம் டஜன் கணக்கான பொதுக்கூட்டங் களில் பேசினார். ஆயிரமாயிரம் ஜனங்களுக்குக் காங்கிர ஸின் லட்சியங்களை எடுத்துச் சொன்னார். இப்படி 'இம

யம் முதல் குமரி வரை ' ஓய்வு ஒழிவு இன்றிப் பிரசாரம் செய்தார் நேரு.

காங்கிரஸ் வெற்றி பெற்றது; மாகாண மந்திரி சபைகளை அமைத்து ஆளத் தொடங்கியது. நேருவின் சகோதரி ஐக்கிய மாகாண மந்திரிகளில் ஒருவராகி ' இந்தியர்வின் முதல் பெண் மந்திரி ' எனும் அந்தஸ்தைப் பெற்றார்.

நேரு மூன்றாவது முறையாகக் காங்கிரஸின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தொடர்ச்சியாக இரண்டு வருஷங்கள் தலைமைப் பொறுப்பை நிர்வகித்த நேரு அலுப்படைந்தார். மறு வருஷமும் அவரே தலைவர் என்ற பேச்சு அடிபட்டது. நேரு மீண்டும் தலைமைக்குத் தேர்ந்தெடுக்கப்படுவதை 'விரும்பவில்லை. தலைமையில் மாறுதல் தேவை என உறுதியாக நம்பினார் அவர். ஆகவே ஒரு ' வேலைத்தனம் ' செய்தார்! அதை அவரே மிகுதியும் ரசித்துக் கொண்டார்.

ஜவஹர்லால் நேருவை மீண்டும் தலைமைக்குத் தேர்ந்து எடுக்கக் கூடாது; அவரே தொடர்ந்து மூன்று வருஷங்கள் காங்கிரஸின் தலைவராக இருப்பதால் பாதகங்களே ஏற்படும் என்று காரண காரியங்கள் காட்டிக் கார சாரமாகஒரு கட்டுரை எழுதித் தன் பெயரை வெளியிடாமலே, கல்கத்தா ' மாடர்ன் ரெவ்யூ ' பத்திரிகையில் பிரசுரமாகும்படி செய்து விட்டார். அந்தக் கட்டுரை யாரால் எழுதப்பட்டது என்கிற விஷயம் எவருக்குமே தெரியாது. பத்திரிகை ஆசிரியருக்குக் கூடத் தெரியாதாம். அக் கட்டுரை அரசியல் வட்டாரங்களில் எழுப்பிய எதிரொலிகளை

அறிந்து மகிழ்ந்து போனுர் நேரு. அவ் வருஷம் சுபாஷ் போஸ் தான் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். இவ் விஷயம், ஜான்கந்தர் தனது 'இன்ஸைட் ஏஷியா' எனும் நூலில் அம்பலப்படுத்துகிற வரையில் ரகசிய மாகவே நின்று விட்டது.

நேரு அடிக்கடி அயல் நாடுகளுக்குப் போய்வந்து கொண்டு தானிருந்தார். ஐரோப்பாவில் புகைந்து வந்த யுத்த எரிமலை ஹிட்லரின் தயவால் அக்னி கக்கி உலக மகா யுத்தமாக மாறியது. வருஷக்கணக்கிலே வளர்ந்தது.

இந்தியாவில் காங்கிரஸ் மந்திரிசபைகள் ராஜி நாமா செய்தன. கால ஓட்டத்தோடு போட்டியிட்டுத் தீவிர சம்பவங்கள் நிகழலாயின. காலப்பாழிலே சரித்திரம் சார மற்று வறண்டுபோவதை உணர்ந்த காந்திஜீ 'வெள்ளைய னே, வெளியேறு!' என்று கோஷமிட்டு, சுதந்திரப் போருக்குக் கொடியேற்றி வைத்தார். நாடு முழுவதும் கொந்தளித்து எழுந்தது, காந்தியும் இதர தலைவர்களும் கைது செய்யப்பட்டனர். பிறகு நடந்தவை எல்லாம் நாட் டினரின் நினைவில் பசுமையாய் நிற்பவை தான்.

தலைவர்கள் விடுதலை, பிரிட்டஷாரின் புதியதிட்டம், முஸ்லிம் லீகின் முரட்டுப் பிடிவாதம், நாடு துண்டாடப் பட்ட கதை, பிரிட்டிஷார் ஆட்சிப் பொறுப்பைக் காங்கி ரஸிடம் ஒப்புவித்து விட்டு வெளியேறியது, 1947-ல் சுதந் திர உதயம், பிறகு இந்து முஸ்லிம் கலவரம், காந்திஜீயின் நவகாளி யாத்திரை, ஒற்றுமைக்காக உபவாசம், 1948 ஜனவரி 30-ம் தேதி கோட்சே காந்திஜீயைத் துப்பாக்கி யால் சுட்டுக் கொன்றது—இவை எல்லாம் இந்தியாவின்

சுதந்திர சரித்திரத்தில் பெரிய பெரிய அத்தியாயங் களாகும்.

சுதந்திர இந்தியாவின் முதல் பிரதம மந்திரி ஆகும் பாக்கியம் ஜவஹர்லால் நேருவுக்குக் கிடைத்தது. சுதந்திர சர்க்காரைத் திறம்பட வகிப்பதுடன், நாட்டின் முன் நின்ற எத்தனையோ பிரச்னைகளுக்கு முடிவு காண வேண் டிய பொறுப்பும் நேருவுக்கு ஏற்பட்டது.

இரண்டாவது மகாயுத்தத்தின் விளைவுகளால் உலக நாடுகள் எல்லாமே பாதிக்கப்பெற்று விட்டன. யுத்தம் முடிந்திருந்தாலும், யுத்தபீதி மடிய வில்லை. எந்தச் சமயத் திலும் மற்றொரு உலக யுத்தம் கோரமாய் தலை தூக்கலாம் என்ற பயங்கரம் நீடித்தது. வல்லரசுகள் ஒன்றைக் கண்டு ஒன்று அஞ்சி, பயத்தினால் மற்றொரு யுத்தத்துக்கு விதை தூவு வதிலேயே ஆர்வம் காட்டலாயின.

உலக நாடுகள் எதையும் பகைத்துக் கொள்ளாமல், நிலையான சமாதானத்தை வலியுறுத்தும் முறையில், இந் தியாவில் அயல் நாட்டுக் கொள்கைகளை அமைத்தார் நேரு. ஆசியப் பிரச்னைகளில் அக்கறை காட்டினார்.

ஆசிய நாடுகள் நேருவின் தலைமையை எதிர் நோக் கின. உலக வல்லரசுகள் அவரது மேதைக்கும் திறமைக் கும் தலைவணங்கி, அவருடைய ஆலோசனைகளை அங்கீ கரித்தன. உலகின் முன்னிலே நேருவின் மதிப்பு இமய அளவு உயர்ந்து விட்டது. 'மனித குல மாணிக்கம்', சமா தான தூதுவர்' என்றெல்லாம் போற்றப்படுகிறார் நேரு.

சுதந்தர இந்தியாவில் பொதுத் தேர்தல் வந்தது. அரசியல் கட்சிகள் பலவும் காங்கிரஸைத் தோற்கடித்து. நேரு ஆட்சிக்கு முற்றுப்புள்ளி வைக்க முயன்றும் பலனில்லை. நாட்டினரின் நம்பிக்கை நேருவிடமே நிலைத்து விட்டது. 'எங்களுக்கு நேருஜீ தான் வேண்டும்; வேறு ஜீ எவரும் வேண்டாம்' என்று தீர்ப்பளித்து விட்டார்கள். ஆகவே நேருவே மறுபடியும் இந்தியாவில் பிரதமர் ஆனார்.

இந்தியாவில் பொருளாதார நிலையை வளப்படுத்தவும், உற்பத்தியை அதிகரிக்கவும், பலதுறைகளிலும் வழிகாட்டும் 'ஐந்தாண்டுத் திட்டம்', திட்டப் பட்டது. நேரு சர்க்காரின் ஆட்சி முறையில் இந்தியாவில் நிகழ்ந்துள்ள சாதனைகள் பெரியன. இனி வரப்போகும் வருஷங்களில் பலனளிக்கக்கூடிய முறையில் வகுக்கப் பெற்றுச் செயல்படுத்தப்படும் திட்டங்கள் சிறந்தன. உலகின் பல பகுதிகளிலும் உள்ள நாட்டினர் யாவரும் வியந்து பாராட்டும் வகையில் உள்ளன அவை.

உலகின் வல்லரசுகள். புதிய குடியரசுக் குழந்தையான இந்தியாவையும் தங்களுக்குச் சமமான அந்தஸ்தில் மதித்திருப்பதற்கு நேரு தான் முக்கிய காரணம் என்று சொன்னால் அது மிகையான கூற்று அல்ல.

**காஷ்மீர் விவகாரம், பாகிஸ்தான் உறவு, கொரியாப் பிரச்னை, யுத்தக் கைதிகள் பிரச்னை, இலங்கை இந்தியர் பிரச்னை** முதலியவைகளில் திருப்திகரமான முடிவு காண ஆர்வத்துடன் பாடுபட்டது நேருவின் திறமைக்கும் சமாதான ஆர்வத்திற்கும் நல்ல எடுத்துக்காட்டுகளாகும்.

நேருவின் வாழ்க்கை அனைவரும் வியக்கத் தகுந்த வகையில் வெற்றிப் பாதையிலேயே அமைந்துள்ளது. தனது வாழ்க்கையைக் குறித்து நேரு ஒரு இடத்தில் இவ் விதம் எழுதியிருக்கிறார்.

"என்னுடைய வாழ்க்கையை நான் மீண்டும் அனு பவிக்கச் சந்தர்ப்பம் கிட்டுவது சாத்தியமானால், இன்றைய அறிவும், அனுபவமும் துணை நிற்கப் பழைய வாழ்வை வாழ முடியுமானால், எனது சொந்த வாழ்க்கை நியதியில் அநேக மாறுதல்களைப் புகுத்த நான் முயற்சிப்பேன் என் பது உண்மைதான். ஆனால் பொது வாழ்வு சம்பந்தப் பட்ட எனது முடிவுகளை நான் மாற்ற விரும்பவே மாட் டேன். அவற்றில் நான் மாறுதல் செய்ய முடியாது தான். ஏனெனில் என்னிலும் வலியவை அவை. எனது கட்டுப் பாட்டுக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒரு சக்தி தான் என்னை அவற்றிடம் இட்டுச் சென்றுள்ளது என்பதே உண்மை யாகும்."

ஆகவே இறந்த கால நிகழ்ச்சிகளை எண்ணி நேரு வருத்தப்படுவதற்கு எதுவுமில்லை. நிகழ் காலத்திய சரித் திரத்தை ஸ்தாபித்து வரும் நேரு எதிர் காலத்தில் நிச்சிய நம்பிக்கை கொண்டிருக்கிறார். இந்திய மக்களுக்கும் நம் பிக்கை அளித்து வருகிறார். அவரால் இந்தியா இன்னும் அதிகமாக மாண்புறும் என்பது உறுதி.

## அத்தியாயம் 12

இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை காங்கிரஸ் ஏற் றுக் கொண்ட பிறகு, காங்கிரஸ் கட்சியில் கட்டுப் பாடு

குலைந்து வந்தது. பதவிப் பித்தும், ஊழல்களும் பெருகி வந்தன. சில வருஷங்களுக்கு முன்பு 'காங்கிரஸைக் கலைத்துவிடுங்கள்' என்று காந்திஜீ கூறிய வார்த்தைகள் தீர்க்க தரிசன உண்மை என்றே தோன்றியது. நாட்டில் மலிந்துள்ள இதர அரசியல் கட்சிகளின் பிரசாரத்தினாலும் காங்கிரஸின் பெயருக்கு மாசு ஏற்பட்டு வந்தது.

காங்கிரஸைக் காப்பாற்றி, அதற்கு மறுபடியும் பெருமை தரக்கூடியவர் ஜவஹர்லால் நேரு ஒருவர் தான் என்று கட்சியினர் உணர்ந்தார்கள். அதனால் 1953-ல் அவரையே தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள்.

1954 ம் வருஷம் கல்கத்தா அருகிலுள்ள கல்யாணியில் கூடிய காங்கிரஸுக்கும் நேரு தான் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அங்கு அவர் நிகழ்த்திய தலைமைஉரையில் இந்தியப் பிரச்னைகள், உலக தொடர்பு பற்றிஎல்லாம் விரிவாக ஆராய்ந்தார். யுத்த பயங்கரம், சமாதானத்தின் அவசியம், இந்தியாவின் அயல் நாட்டுக் கொள்கை முதலியன பற்றியும் தெளிவு படுத்தினார்.

"ஜனநாயகத்தைப் பாதுகாப்பதாகச் சொல்லிக் கொண்டும், சுதந்திரத்தின் பெயராலும், வேண்டாத சூழ்நிலை ஒன்று உருவாகி வருகிறது. அது ஜனநாயகத்தின் மூச்சைப் பிடிக்கிறது; சுதந்திரத்தைத் திணறடிக்கிறது. முடிவில் அது இரண்டையுமே இல்லாமல் செய்துவிடும் என்றே தோன்றுகிறது. உலகத்தில் நாம் தான் தலைமை தாங்க வேண்டும் என்று நாம் உரிமை கொண்டாடவுமில்லை; ஆசைப்படவுமில்லை. இதர நாடுகளின் உரிமை

யில் நாம் தலையிட விரும்பவில்லை. நமது உரிமைகளில் பிறர் குறுக்கிடுவதை நாம் ஆதரிக்கவும் முடியாது. உலக நாடுகளுக் கிடையே பலவித அபிப்பிராய பேதங்கள் இருந் தாலும் கூட பரஸ்பரம் சிநேகபாவமும் கூட்டுறவும் அவசியம் என நாம் நம்புகிறோம். நமது கொள்கைகளி னாலோ, அல்லது நாம் கையாளத் துணிகிற சில நடை முறைகளினாலோ, உலகத்தில் நீடிக்கிற பெரும் பிரச்னை களில் குறிப்பிடத்தகுந்த மாற்றங்களை விளைவித்துவிட முடியும் என்ற வீண் ஆசை நமக்குக் கிடையாது. ஆனால் சில வேளைகளிலாவது சாதகமான விளைவுகள் ஏற்படச் செய்து சமாதானம் நீடிக்க உதவிபுரிய முடியும், அதற் குச் சந்தர்ப்பம் ஏற்படும் பொழுது சகலவிதமான முயற்சி களையும் செய்வதே நல்லது.”

நம் நாடு பலமும் வளமும் அடைவதற்கு இதர தேசங்களின் உதவியை எதிர்பார்த்துக் கொண்டிருப்ப தில் பிரயோசனமில்லை ; நமது நிலையை நாமே உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று அடிக்கடி நேரு வற்புறுத்தி வருகிறார். கல்யாணிக் காங்கிரஸின்போதும் இதை எடுத் துச் சொன்னார் அவர் ;

“ நமது முயற்சிகளினால்தான் நமது வலிமையை நாம் பெருக்கிக் கொள்ள முடியுமே தவிர மற்றவர்களை நம்பியிருப்பதினால் அல்ல. தற்காப்பு, சுய தேவைப் பூர்த்தி ஆகியவைகளினால் நமது பலம் பெருகுவதுடன் இதர நாடுகள் நம்மிடம் கொள்ளும் மதிப்பும் அதிகரிக் கும். நமது நாடு நம்முடையதே என்ற நிலையும் நீடிக்கும்.

இதற்குப் பெருமுயற்சி தேவைதான். ஆள்பலம், பொருளாதார பலம் மாத்திரமல்ல ; ஆன்மபலம் பெறுவதற்குரிய முயற்சியும் வேண்டும். அந்த விதமான முயற்சிதான் நமது நாட்டுச் சுதந்திரம் பெற்றுத் தந்தது. சுதந்திரம் கிடைத்த புதிதில் எதிர்ப்பட்ட இன்னல்களை வெற்றி பெறவும் அதுதான் துணைபுரிந்தது. அதுதான் நம் நாட்டினரின் உண்மையான பலம். நாம் விழிப்புடன் இருப்போம். நமது தேசத்தின் பூர்வீகமான கலாசாரத்தையும், நிலையான பண்பையும் பாதுகாப்போம். உலகில் சமாதானம் இடம் பெறுவதற்காக நாம் செய்கிற முயற்சிகளை விடாது வளர்ப்போம். இவற்றுக்கெல்லாம் ஆதாரமாக நம்மை நம்பியே நாம் வாழ்வோம்.''

ராயன் அச்சகம், சென்னை-1.

